ஓம் குஹேசாய நம:

ஓம் குமரகுருதாச குருப்யோ நம:

## பதிப்புரை

நம் செந்தமிழ் நாடு செய்த தவப்பேற்ருல், பாண்டி நாட்டைச் சேர்ந்த (திருவிராமேச்சுரத்தை அடுத்துள்ள) பாம்பன் பதியில் அவதரித்தவர் பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் ஆவர். அவர் சென்னை திருவான்மியூர் மயூரபுரத்தில் கோயில் கொண்டுள்ளார். அவர் சண்முகப் பரமனைக் கனவிலும் நனவிலும் தரிசித்த தவ முனிவர். அவர் அருளிய 6666 பாடல்களும் செவ்வேளைக் குறித்தனவே.

அவரது பாடல் வரிசையில் நான்காம் மண்டலத்தைச் சேர்ந்தது சண்முக கவசம் என்ற இந்நூல். இது ஆறு திசைகளிலும் உயிராலும், ஊழாலும், பிணி, பகை, பிசாச வகையாலும் உண்டாகும் அல்லலை அகற்றும் கவசமாய்த் திகழ்வது.

'அ'கர முதல் 'ன'கரம் வரையில் முதலாகக் கொண்ட முப்பது விருத்தங்கள் இந்நூலில் உள்ளன. இந்நூல் மருந்தாகவும், மந்திரமாகவும் தீராப்பிணி தீரச்செய்த அற்புதங்கள் அளவில.

இந்நூலுக்குக் காலஞ் சென்ற குகஸ்ரீ ரசபதி அவர்கள் அரிய உரை வகுத்தனர். இந்நூல் இப்போது கிடைப்பது அரிது. ஆகலின், அதனைச் சென்னை மஹாதேஜோ மண்டலத்தாரின் இசைவு பெற்றுச் சிதம்பர சிவலிங்க சுவாமிகள் விருப்பப்படி சென்னை சிந்தாதிரிப்பேட்டை திரிபுரசுந்தரி சில்க் அவுஸ் உரிமையாளர் காஞ்சீபுரம் M. பலராம முதலியார் அவர்கள் அன்பளிப்பாக வெளியிடுகின்றனர். இதனை வெளியிட்டோரும், பக்திப் பிறங்கப் பாராயணம் செய்வோரும் மயூரநாதனது மன்னு பேரருளால் எல்லா நலங்களும் பெற்று வாழ்வார்களாக.

ஷ சுவாமிகளின் சீடர்

**தி. தி. குப்புசுவாமி செட்டியார்,**

செயலாளர்,

மஹாதேஜோ மண்டலம்,

சென்னை.

## கடவுள் வணக்கம்

ஒளியே யொளிக்கு முதற் பொருளே
உயர்மாணிக்கப் பெருவரையே
தளியே யிருக்குந் தெய்வ மெலாந்
தாழுஞ் சரணக் குமரேசா
களியே தருமுன் றிருவடியென்
கதியா யென்று மினிதெய்த
எளியே னியற்றுஞ் செயல்பற்று
தேனே யிவ்வா றுழல்கின்றேன்.

(குமரகுருதாசர் பாடல் நான்காவது மண்டலம்)

"மடமோட்டுங் கருணைதனை மறவேனெஞ்
சுளவளவும் மாற்றார் நூலைத்
தொடமாட்டே னவருரைக்கு முரைகேளே
னனியாயத் தொடக்கர் கோட்குட்
படமாட்டே னருள்சுரந்து வினையொரு
மொழிப்பயனிற் படரு நோக்கம்
விடமாட்டே னினிதளித்தி யெனதுகுகப்
பிரமமென விளங்கெம் மானே." —திருப்பா

---

## ஸ்ரீமத் அருணகிரிநாத முனீந்திரர் துதி

"அருவமொரு நான்காகி உருவமொரு
நான்காகி அறையி ரண்டும்
மருவியுள உருவருவ மொன்ருகி
முத்திரமும் வழுத்த ஒண்ணுப்
பெருவெளிக்கு மப்பாலா யுள்ளபொரு
ளீதெனவே பெரிதும் சேயோன்
ஒருவனையே புகழ்ந்தஅருள் அருணகிரிச்
சேவடிப்போ துளத்துள் வைப்பாம்"

---

## பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் துதி

பாம்பனெனனும் பதிமுளைத்த பவளக்குன்றே,
பழம்பாண்டித் தமிழ்ப்பொழிலே பண்பாரில்லத்
தீம்பயிரே அன்புகொழிதிரையே தெய்வத்,
திறங்கண்ட அறநிலேயே செகத்திலுற்ற
கூம்பலர எழுகதிரே குழந்தைவேலன்,
குகநெறியே நெறிஎன்ற குருவேநீதி
ஓம்புகவென் றுரைத்தருளி உலகில்வாழ்ந்த
உயர்குமரகுரு தாசஒளியே போற்றி.

ஓம் குமார குருப்யோ நமஃ

# சண்முக கவசம்

---

*அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்*

அண்டமாய் அவனி யாகி அறியொணாப் பொருள தாகித்
தொண்டர்கள் குருவு மாகித் துகளறு தெய்வம் ஆகி
எண்திசை போற்ற நின்ற என்னருள் ஈசன் ஆன
திண்திறல் சரவணத்தான் தினமுமென் சிரசைக் காக்க. 1

ஆதியாம் கயிலைச் செல்வன் அணிநெற்றி தன்னைக் காக்க
தாதவிழ் கடப்பந் தாரான் தான்இரு நுதலைக் காக்க
சோதியாம் தணிகை யீசன் துரிசிலா விழியைக் காக்க
நாதனும் கார்த்தி கேயன் நாசியை நயந்து காக்க. 2

இருசெவி களையும் செவ்வேள் இயல்புடன் காக்க வாயை
முருகவேள் காக்க நாப்பல் முழுதுநல் குமரன் காக்க
துரிசறு கதுப்பை யானைத் துண்டனார் துணைவன் காக்க
திருவுடன் பிடரி தன்னைச் சிவசுப்ர மணியன் காக்க. 3

ஈசனாம் வாகு லேயன் எனது கந்தரத்தைக் காக்க
தேசுறு தோள்வி லாவும் திருமகள் மருகன் காக்க
ஆசிலா மார்பை யீரா(று) ஆயுதன் காக்க என்றன்
ஏசிலா முழங்கை தன்னை எழில்குறிஞ் சிக்கோன் காக்க. 4

உறுதியாய் முன்கை தன்னை உமையிள மதலை காக்க
தறுகண் ஏறிடவே என்கைத் தலத்தைமா முருகன் காக்க
புறங்கையை அயிலோன் காக்க பொறிக்கர விரல்கள்பத்தும்
பிறங்குமால் மருகன் காக்க பின்முது கைச்சேய் காக்க. 5

ஊண்நிறை வயிற்றை மஞ்ஞை யூர்தியோன் காக்க வம்புத்
தோள்நிமிர் சுரேசன் உந்திச் சுழியினைக் காக்க குய்ய
நாணினை அங்கி கௌரி நந்தனன் காக்க பீஜ
ஆணியைக் கந்தன் காக்க அறுமுகன் குதத்தைக் காக்க. 6

எஞ்சிடா(து) இடுப்பை வேலுக்(கு) இறைவனார் காக்க காக்க
அஞ்சகனம் ஓர் இரண்டும் அரன்மகன் காக்க காக்க
விஞ்சிடு பொருள் காங்கேயன் விளரடித் தொடையைக் காக்க
செஞ்சரண் நேச ஆசான் திமிரும்முன் தொடையைக் காக்க. 7

---

ஏரகத் தேவன் என்தாள் இருமுழங் காலும் காக்க
சீருடைக் கணைக்கால் தன்னைச் சீரலை வாய்த்தே காக்க
நேருடைப் பர(டு) இரண்டும் நிகழ்பரங் கிரியன் காக்க
சீரிய குதிக்கால் தன்னைத் திருச்சோலை மலையன் காக்க. 8

ஐயுறு மலையன் பாதத்(து) அமர் பத்து விரலும் காக்க
பையுறு பழநி நாத பர(ன்) அகம் காலைக் காக்க
மெய்யுடல் முழுதும் ஆதி விமல சண்முகவன் காக்க
தெய்வ நாயக விசாகன் தினமும் என் நெஞ்சைக் காக்க. 9

ஒலியெழ உரத்த சத்தத் தொடுவரு பூத ப்ரேதம்
பலிகொள் இராக்க தப்பேய் பலகணத் தெவையானாலும்
கிலிகொள எனை வேல் காக்க கெடுபரர் செய்யும் சூனியம்
வலியுள மந்த்ர தந்த்ரம் வருத்திடா(து) அயில்வேல் காக்க.

ஓங்கிய சீற்ற மேகொண்(டு) உவணிவில் வேல்சூ லங்கள்
தாங்கிய தண்டம் எஃகம் தடிபர(சு) ஈட்டி ஆதி
பாங்குடை ஆயுதங்கள் பகைவர் என் மேலே ஓச்சின்
தீங்குசெய் யாமல் என்னைத் திருக்கைவேல் காக்க காக்க.

ஔவியம் உளர் ஊன்உண்போர் அசடர் பேய் அரக்கர்புல்லர்
தெவ்வர்கள் எவரா னாலும் திடமுடன் எனைமல் கட்டத்
தவ்வியே வருவா ராயின் சராசரம் எலாம் புரக்கும்
கவ்வுடைச் சூர சண்டன் கையயில் காக்க காக்க. 12

கடுவிடப் பாந்தள் சிங்கம் கரடி நாய் புலிமா யானை
கொடிய கோனாய் குரங்கு கோலமார்ச் சாலம் சம்பு
நடையுடை யெதனா லேனும் நான் இடர்ப் பட்டிடாமல்
சடுதியில் வடிவேல் காக்க சானவி முனைவேல் காக்க. 13

ஙகரமே போல்தழீஇ ஞானவேல் காக்க வன்புள்
சிகரிதேள் நண்டுக்காலி செய்யன் ஏறு ஆலப் பல்லி
நகமுடை ஓந்தி பூரான் நளிவண்டு புலியின் பூச்சி
உகமிசை இவையால் எற்கோர் ஊறிலா(து) ஐவேல் காக்க.

சலத்தில் உய் வன்மீன் ஏறு தண்டுடைத் திருக்கை மற்றும்
நிலத்திலும் சலத்திலுந்தான் நெடுந்துயர் தரற்கே யுள்ள
குலத்தினால் நான் வருத்தம் கொண்டிடா(து) அவ்வவ் வேளை
பலத்துடன் இருந்து காக்க பாவகி கூர்வேல் காக்க. 15

ஞமலியம் பரியன் கைவேல் நவக்கிர கக்கோள் காக்க
சுமவிழி நோய்கள் தந்த சூலை ஆக்ராண ரோகம்
திமிர்கழல் வாதம் சோகை சிரம் அடி கர்ண ரோகம்
எமையணு காமலேபன் னிருபுயன் சயவேல் காக்க. 16

டமருகத்(து) அடிபோல் நைக்கும் தலையிடி கண்டமாலை
குமுறு விப்புருதி குன்மம் குடல்வலி யீழை காசம்
நிமிரொணு(து) இருத்தும் வெட்டை நீர்ப்பிர மேகம் எல்லாம்
எமைஅடை யாமலே குன்று எறிந்தவன் கைவேல் காக்க.

இணக்கம் இல்லாத பித்த எரிவுமா சுரங்கள் கைகால்
முணக்கவே குறைக்கும் குட்டம் மூலவெண் முளைதீ மந்தம்
சணத்திலே கொல்லும் சன்னி சாலமென் றறையும் இந்தப்
பிணிக்குலம் எனையாளாமல் பெருஞ்சத்தி வடிவேல் காக்க.

தவனமா ரோகம் வாதம் சயித்தியம் அரோசகம் மெய்
சுவறவே செய்யும் மூலச்சூ(டு) இளைப்(பு) உடற்று விக்கல்
அவதிசெய் பேதி சீழ்நோய் அண்டவா தங்கள் சூலை
எவையும் என் இடத்தெய் தாமல்எம்பிரான் திணிவேல்காக்க.

நவைப்புறு கிரந்தி வீக்கம் நணுகிடு பாண்டு சோபம்
அமர்த்திடு கருமை வெண்மை ஆகுபல் தொழுநோய் கக்கல்
இமைக்குமுன் உறு வலிப்போ(டு) எழுபுடைப் பகந்த ராதி
இமைப்பொழு தேனும் என்னை எய்தாமல் அருள்வேல் காக்க.

பல்லது கடித்து மீசை படபடென் றேதுடிக்கக்
கல்லினும் வலிய நெஞ்சம் காட்டியே உருட்டி நோக்கி
எல்லினும் கரியமேனி எமபடர் வரினும் என்னை
ஒல்லையில் தாரகாரி ஓம் ஐம் ரீம் வேல் காக்க. 21

மண்ணிலும் மரத்தின் மீதும் மலையிலும் நெருப்பின் மீதும்
தண்ணிறை ஜலத்தின் மீதும் சாரி செய் யூர்தி மீதும்
விண்ணிலும் பிலத்தின் உள்ளும் வேறெந்த இடத்தும் என்னை
நண்ணி வந்(து) அருளார் சஷ்டி நாதன் வேல் காக்க காக்க.

யகரமே போல் சூலேந்து நறும்புயன் வேல் முன் காக்க
அகரமே முதலாம் ஈராறு அம்பகன் வேல் பின் காக்க
சகரமோ(டு) ஆறும் ஆனோன் தன்கை வேல் நடுவில் காக்க
சிகரமின் தேவ மோலி திகழ் ஐ வேல் கீழ் மேல் காக்க. 23

ரஞ்சித மொழிதே வானை நாயகன் வள்ளி பங்கன்
செஞ்சய வேல்கிழக்கில் திறமுடன் காக்க அங்கி
விஞ்சிடு திசையின் ஞான வீரன் வேல் காக்க தெற்கில்
எஞ்சிடாக் கதிர்கா மத்தோன் இகலுடைக்கரவேல் காக்க.

லகரமேபோல் காளிங்கன் நல்லுடல் நெளிய நின்று
தகர மர்த்தனமே செய்த சங்கரி மருகன் கைவேல்
நிகழெனை நிருதி திக்கில் நிலைபெறக் காக்க மேற்கில்
இகல்அயில் காக்க வாயுவினில் குகன் கதிர்வேல் காக்க. 25

வடதிசை தன்னில் ஈசன் மக(ன்) அருள் திருவேல் காக்க
விடையுடை யீசன் திக்கில் வேத போதகன் வேல் காக்க
நடக்கையில் இருக்கும் ஞான்றும் நவில்கையில் நிமிர்கையில் கீழ்க்
கிடக்கையில் தூங்கும் ஞான்றும் கிரிதுளைத்துள வேல்காக்க.

இழந்து போகாத வாழ்வை யீயும் முத்தையனார் கைவேல்
வழங்கும் நல்ஊண் உண்போதும் மால்விளையாட்டின்போதும்
பழம்சுரர் போற்றும் பாதம்பணிந்து நெஞ்(சு) அடக்கும்போதும்
செழும்குணத் தோடே காக்க திடமுடன் மயிலும் காக்க. 27

இளமையில் வாலிபத்தில் ஏறிடு வயோதிகத்தில்
வளர் அறுமுகச் சிவன்தான் வந்தெனைக் காக்க காக்க
ஒளியெழு காலை முன்எல் ஓம்சிவ சாமி காக்க
தெளிநடு பிற்பகல்கால் சிவகுரு நாதன் காக்க. 28

இறகுடைக்கோழித்தோகைக்(கு) இறைமுன் இராவில் காக்க
திறலுடைச் சூர்ப்பகைத்தே திகழ்பின் இராவில் காக்க
நறவுசேர் தாள்சிலம்பன் நடுநிசி தன்னில் காக்க
மறைதொழு குழகன் எம்கோன் மாருது காக்க ககாக். 29

இனமெனத் தொண்ட ரோடு மிணக்கிடுஞ் செட்டி காக்க
தனிமையிற் கூட்டந் தன்னிற் சரவண பவனார் காக்க
நனியனு பூதி சொன்ன நாதர்கோன் காக்க வித்தைக்
கனிவொடு சொன்ன தாசன் கடவுடான் காக்க வந்தே. 30

ஓம் குமார குருப்யோ நம:

# சண்முக கவசம்

அறுசீராசிரியம்

**அண்டமாய் அவனி யாகி அறியொணாப் பொருள தாகித்**
**தொண்டர்கள் குருவு மாகித் துகளறு தெய்வம் ஆகி**
**எண்டிசை போற்ற நின்ற என்னருள் ஈசன் ஆன**
**திண்டிறல் சரவணத்தான் தினமுமென் சிரசைக் காக்க. 1**

(பதவுரை) அண்டம் ஆய் - விண்ணாகியும், அவனி ஆகி - நில உலகமாகியும், அறியொணாப் பொருளது ஆகி - (வாக்கு மனம் காயத்தால்) அறிய இயலாத மெய்ப்பொருளாகியும், தொண்டர்கள். குருவும் ஆகி - குணம் சிறந்த பணியாளர்க்கு (வழிகாட்டும்) குருவாகியும், துகள் அறு தெய்வம் ஆகி - களங்கம் அற்ற கடவுள் ஆகியும், எண் திசை போற்ற நின்ற - எட்டுத் திக்கில் உள்ள எவராலும் வழிபட இருந்த, என் அருள் ஈசன் ஆன - எனது அருளுடைய இறைவனாகிய, திண் திறல் சரவணத் தான் - பேராற்றல் பெற்ற சரவணப் பொய்கையில் முதற்காட்சி தந்த முதல்வன், தினமும் என் சிரசைக் காக்க - ஒவ்வொரு நாளும் என் தலையை உவந்து காத்தருள்வதாக, (எ-று.)

"பையதிரைக் கடலேழு தீவேழு கிரியெட்டு
பண்ணுமக மேருவொன்று
பகருமிவை கூடிலோர் உலகமாம்; அவ்வுலகு
பதினொன்கொ ரண்டமாகும்;
மெய்யிலகும் அண்டமா யிரத்தெட்டு கூடிடில்
மேதினியி லோர் புவனமாம்;
மேலான புவனமிரு நூறிருபதோர்நான்கு
மேவு மகிலாண்ட மொன்றும்;

ஐயமில அகிலாண்டம் ஒரு கோடி கூடிடில்
ஆதிபிரமாண்டம் ஒன்றும்;
அப்பிரம அண்டமொரு கோடியா யவை கூடில்
அருள்பரம அணுவில் ஒன்றும்;
பைய அணு உனதுதிரு வடியினி லதேகமாம்
பரம கயிலாய சிவமே!
பசுவினைகள் அகலவரும் அதிசயமெய்ஞ் ஞானமருள்
பசுபதியு மான குருவே''

என்று பசுபதி மாலை படித்தபடி அண்டங்களின் செய்தியையும், அவைகளில் அடங்கிய அகில உலக வரலாறுகளையும் அறிவித்தது முதலடி யெனினும் அமையும். உலக வடிவன், உலகினுக்கு உயிரானோன், உலகங் கடந்தோன் எனும் பொருளில் விஸ்வரூபன், விஸ்வாந்தர்யாமி, விஸ்வாதிகன் என்று இறைவனை யேத்துகின்றது ஏதமில்லாத வேதம். உயர்ந்த இவ்வுண்மைகளை உணர்ந்து, 'அண்டமாய் அவனியாகி' என்றார்.

அண்டமாய் அவனியான பெரிய பொருள், சொற்பிரபஞ்ச நூலறிவாலும், தத்துவ ஆய்வாம் பொருளறிவாலும், அருந்தவைப்பட்ட ஆன்ம அறிவாலும், காண்டற்கும் கருதற்கும் அரியது ஆகலின், 'அறியொணாப் பொருள்' என்றார். தேவராலும், மூவராலும், பிற ஏவராலும் அறியொணா அப்பொருளை, 'அறிவினுக் கறிவாகி யெங்கு நிறை பெரிய பொருளே' என்று தகவொடு குறிப்பிடுகின்றார் தாயுமான அடிகள்.

வாக்கு மனம் காயத்தால் அப்பொருளை வழிபட்டு, அப்பொருளில் உலகரைத் தொடர்பு படுத்துபவரைத் 'தொண்டர்கள்' என்றார்.

பயன் கருதாது வழிபடும் அன்பர்க்கு வழிகாட்ட மெய்ப்பொருள் வருகின்றது என்பார், 'குருவுமாகி' என்றார். கு-இருள்; ரு ஒளி; எனவே, அறியாமை

இருளகற்றித் தன் மெய்யொளி யுதவும் மூர்த்தம் குருமூர்த்தம் எனப்பெறும். குருவுமாகி என்ற இடத்து உம்மை, உயர்வு சிறப்பு. அண்டமாய் அவனியான நிலை - அஃறிணை நிலை; குருவான நிலை - உயர்திணை நிலை.

> "கரையறு பிறவிவெம் கடலு ளேவிழுந்(து)
> அயர்வுறு துயருழந் தவர்ஐ யோஎன
> விரைவொடு வினைகெட நோக்கி வேதகக்
> கரையினை யருள்பவன் கருணை நன்குரு"

எனும் குருவின் அருள்நலம் குறித்த முன்னோர் பொன்மொழி யிங்கு உன்னல் தகும்.

குருவாகிக் கால் காட்டிக் கை காட்டிக் கண் காட்டிய கருணையால், பொறிபுல கரண சேட்டை யெல்லாம் பொசுங்கிப்போம்; அந்நிலையில், உயர்ந்து மேல் நோக்கி யெழும் உணர்வுடைய ஆன்மாவின் திருமுன், களங்கமற்ற தெய்வமாய்க் காட்சிதரும் ஆகலின், 'துகளரு தெய்வமாகி' என்றார். துகளறுதல் - இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், தெய்வம் - பால்பகா அஃறிணை.

எத்திசையி லிருக்கும் எவ்வுயிரும், அம்மூலப் பரம் பொருளையே தம் பரிபாகத்திற்குத் தக்கபடி ஏத்துகின்றதாகலின், 'எண்திசை போற்ற' என்றார். அநாதி நித்யனென என்றும் நிலைபெற இருந்து, இம்மை மறுமை வீடு என்னும் முச்செல்வமும் வழங்கும் முதல்வனாகலின், 'நின்ற என்னருள் ஈசன்' என்றார். ஈசன் - சர்வ ஐஸ்வர்ய சம்பன்னன்; அருள் என் ஈசன் என இயைத்து, அருளையுடைய எனது பிரபுவான எனப் பொருள் கோடலுமாம்.

கருவாய்ப் பட்டுத் தோன்றி அருந்தவத்தால் உயர்ந்த அமரரைப் போலின்றி, சொருபத்திலிருந்து வெளியான தடத்தத் திருவுருவில் தங்கி, அண்டங்

களைப் பேன் முட்டைகள் போல் திருமேனியின் மயிர்க்கால்கள் தோறும் தாங்கும் திண்மையும், மும் மல அரிஷாதி தோஷ சொருப சூராதியரை அடக்கி யாள வெளிப்படுத்தும் திறலும் உடைய திருமேனி யென்பார், 'திண் திறல்' என்ருர். திண் திறல் - இருபெயரொட்டு எனல் இங்கு ஏலா தென்க.

காடுபோல் அடர்ந்த நாணல் புற்களுக்கு சரவ ணம் என்று ஒரு பெயருண்டு. திகழும் அப்புற்கள் நிறைந்த தெய்வ நீர் நிலை, சரவணப் பொய்கை எனும் பெயரை எய்தியது. தீக்கடவுள், வாயுதேவன், கங்கை முதலினோரால், தாங்கலாற்ரு ஞானக் கனற் பொறிகள் ஆறனையும் தாங்கும் ஆற்றல் அப் பொய் கைக்கு அமைந்தது ஆகலின், திண் திறல் என்னும் அடை, பொய்கைக்கு ஆயது எனினுமாம். அப் பொய்கையில் தங்கிய பொறிகள் ஆறும் ஒரு திருமேனியாக, கருணைகூர் முகங்களாறும் கரங்கள் பன்னிரண்டும் கொண்டு, பொய்கையின் பெயர் தன்னில் பொலிந்து விளங்க விளங்கிய தாகலின், 'திண் திறல் சர்வணத்தான்' என்ருர்.

ச - மங்கலம்; ர - ஈகை; வ - அறக்கருணை; ந - மறக்கருணை. அந்த நான்கிலிருந்து உதயஞ் செய்யும் நம்பன் ஆதலின், சரவணபவன் எனப் பெயர் பெறு கின்ருன் எனலும் ஒருவகை. மான்மகளும், வான் மகளும், இந்நாமத் துணையால் இறைவனை மணந் தனர் என்று காந்தம் கூறும்.

சிறந்த அறிவு நிலையம் சிரம்; புன்னெறி யதனிற் போய்ப் போய் அந்த அறிவு புழுங்கிப் போகாமல், நிமல குமரனைக் கும்பிட்டு அச்சிரம் நிமிரவேண்டும். அதற்குச் சரவணத்தான் அருளல் வேண்டும் என் பார், 'தினமும் என் சிரசைக் காக்க' என்ருர்.

எவர்க்கும் எவைக்கும் தலையாயான், என் தலை யைக் காப்பானுக என்பது இப்பாசுர உட்கிடை.

'அவனருளாலே அவன் தாள் வணங்கி' என்று திருவாசகமும், 'தலையே நீ வணங்காய்' என்று அப்பர் பெருமானும் சிரத்திற்கு அறிவுறுத்தல் இங்கு சிந்திக்கத் தகும். இம்மை யிடையூறு எதுவும் நேராதபடி, என் சிரத்தைக் காக்க எனப் பொருள் கோடல் லேசுநடை.

"நின்னையே சிவமாய் அறுமுனி வரும்துதி நிகழ்த்தி
பன்னொறு நலமே படைத்துய்ய அருளிய பரனே
மன்னுமா சோலை மலைமனு! உன்பதம் வணங்கற்(கு)
என்னமா தவம்செய் துள்ளதோ எனதுநல் தலையே"

எனும் திருவலங்கல் திரட்டை இங்கு எண்ணிப் பார்த்தல் நலம். .... ... (1)

**ஆதியாம் கயிலைச் செல்வன் அணிநெற்றி தன்னைக் காக்க**
**தாதவிழ் கடப்பந் தாரான் தான்இரு நுதலைக் காக்க**
**சோதியாம் தணிகை யீசன் துரிசிலா விழியைக் காக்க**
**நாதனும் கார்த்தி கேயன் நாசியை நயந்து காக்க. 2**

(ப-ரை.) ஆதி ஆம் கயிலைச் செல்வன் - தெய்வ முதன்மையாம் திருக்கயிலைத் திருவாளன்; அணி நெற்றி தன்னைக் காக்க - அழகிய நெற்றியைக் காப்பதாக; தாது அவிழ் கடப்பம் தாரான் தான்-மகரந்தம் மலரும் கடப்ப மாலை யணிந்தவன்; இரு நுதலைக் காக்க - இரு புருவங்களையும் காப்பதாக; சோதி ஆம் தணிகை ஈசன் - மகா தேஜோ மண்டல வடிவான தணிகைத் தற்பரன்; துரிசு இலா விழியைக் காக்க - களங்கம் விளையாதபடி என் கண்களைக் காப்பதாக; நாதனும் கார்த்திகேயன் - (கனிந்த அருள்) நாதனை கார்த்திகேயன்; நாசியை நயந்து காக்க - பரிவுடன் என் மூக்கைப் பாது காப்பதாக, (எ-று.)

கயிலைப் பெயர்கொள் மலைகள் பல; அவைகள், பிரகிருதி மாயா நிலத்தன. பிரமரந்திரதிற்கு

மேலுளது உன்மனுகலை; உயர்ந்த அந்த உன்மனை யுலகிற்கு மேலுளது, ககனஞான அப்ராக்ருத கயிலாயம். இம்மை மறுமை வீடு ஆகிய முச் செல்வங்களையும், ஆன்மாக்களின் பரிபக்குவத்திற்குத் தக்கபடி அங்கிருந்து பாதுகாப்பவனுகலின், 'ஆதியாம் கயிலைச் செல்வன்' என்றார்.

மூல பண்டாரத்தை உயிர்கட்கு வழங்கும் அம் முதல்வன், விபூதிமான் எனும் பெயரொடு விளங்குபவன்; வி-மேல்; பூ-நிலம்; தி-ஒளி; எனவே, துவாதசாந்தத் தலங்கடந்த மூலத்தலத்து விளங்கும் முதன்மை யொளியுடைய மூர்த்தியே விபூதிமான் ஆவன். மற்று, வி-சிறந்த; பூதி-ஐஸ்வர்யம் எனவும் பொருளாதலின், சிறந்த பிரபு அவன் என்பது பதவுரையிற் கொண்ட பொருள். நிமல அச்செல்வன் நினைவில் நிற்க, மேதகு விபூதியை நெற்றியில் பூசுவர் மேலோர்.

நியதியொடு தரித்த நிமலநீறு நெற்றியில் இருக்க, தாபம் செய் வினை வெம்மை தணியும்; ஆகாமியம் அணுகா; 'நீறிலா நெற்றிபாழ்' என்பர் அறவோர். எனவே நீறணிவதால் அழகும் பெறுகின்றது நெற்றி. இடையில் தடை பிறவாதபடி நிமலநீறு நெற்றியில் விளங்க, 'அணிநெற்றி தன்னைக் காக்க' என்றார். விபூதியன் எனும் பொருளில் செல்வன் என உரைத்து, அடுத்து நெற்றியை உரைத்தலின் இங்ஙனம் பொருள் கொள்ளப்பெற்றது. நெற்றாயிருப்பது நெற்றி; நெற்றுதல் - முற்றுதல்; முதிர்தல். மலைகளில் முற்றிய கயிலை மலையாளன், என் நெற்றியைக் காக்க எனல் சிந்தனைக்கு உரியது.

மும்மலத் தொடர்பால் பாழ்துன்பம் பல வெய்திப் பல்லிளிக்கின்றது ஆன்மா. ஓயா வேதனை யிவைகள் என உயிர்கட்கு உணர ஒரு காலம் வரும்; இவைகள் நீங்க, அந்தமில் கந்தசிவத்தை ஆன்மா சந்ததமும்

எண்ணும். அந்நிலையில் ஆறுதல் விளைய உயர்ந்த சிவபோகம் ஊட்டும் அருளார்ந்த ஆறுமுகன். காட்டி ஊட்ட வருபவன் கந்தப் பரமனே எனற்குரிய அடையாளம், அப்பரமன் அணிந்திருக்கும் கடப்ப மலர் மாலை. அதை, 'உருள்பூந் தண்தார் புரளும் மார்பினன்' எனவரு திருமுருகாற்றுப் படையும், அதன் பழைய உரையும் இதனை நினைவுறுத்தும். ஊழ்விக்கும் அம்மாலை போல் வளைந்து, அதனை யணிந்தானை நோக்க நிமிரும் என் இரு புருவங்களை யும், கடப்பணி தோளான் காத்தருள்வானாக என்பது, இரண்டாம் அடியின் உட்கிடை.

'சுடர்கோடி, பகல் கதிரெனக் குளிர்கோடி, இராக்கதிரென மிளிர்கோடி, காலாக்கினி யெனப் பிரகாசியா நின்ற பரமாற்புத உறையுள்', எனத் திருப்பா கடவுள் வணக்க மூன்றும் பாட்டின் உரை யுள் அடிகள் குறித்தபடி, பேரொளிப் பிழம்பன்.

'சுப்பிர மதர்ப்பவிர் திருத்தணிகை செற்பிலுறை
சுப்பிர மணியப் பிரமம்' ஆதலின், சோதியாம் என்றார்.

மகா தேஜோ மண்டலமே சாந்தி நிகேதனம்; அதுவே 'சோதியாம் தணிகை' யெனப்பெறும்; அங் கிருப்பவனே சர்வைஸ்வர்ய சம்பன்னன்; தட்ப ஒளி மயமான தணிகையான், காணத் தகாததைக் கண்டு களங்கம் விளையாதபடி, என் கண்களைக் காப்பதாக என்பது மூன்றும் அடியின் செய்தி.

''கண்கள் மங்கிக் காதடங்கிக் கருத்து மயங்குமுனே
தண்கொள் பங்கயங்கள் விள்ளும் தணிகை நெடுங்கிரிவாழ்
பண்கள் பாடு வாயன் சேயன் பனிமலர் மன்பணிகோ
கண்க ளீரா றெந்தை பாத கமலம் வணங்குதுமே''

என்று திருவலங்கல் திரட்டிலுரைத்தபடி, வாயன், சேயன், கோ, பன்னிரு கண்ணன் என்று தணிகை யானை வணங்கிய பக்திப் பெருக்கம், 'சோதியாம் தணிகை யீசன்' என்று சொல்லவைத்தது என்க.

"கண்காள் காண்மின்களோ-கடல் நஞ்சுண்ட
[கண்டன்றன்னை
எண்தோள் வீசிநின் ருடும் பிரான்றனைக்
கண்காள் காண்மின்களோ"

என்ற தமிழ் மறையின்படி, பிரகிருதி விகாரக் காட்சி யின் வாங்க, கடவுள் காட்சியே காணும் கண்கள் களங்கமற்றன; அப்பேறு என்றும் நேர அருள்வ தாக என்பார், 'துரிசிலா விழியைக் காக்க' என்ருர்.

"கண்டனைக் கண்டிராதே காலத்தைக் கழித்தவாறே"

என்ற தேவாரமும், 'சிவன் திருவைக் காணுக் கண்ணே குருடாம்' என்ற காஞ்சிப் புராணமும்,

"கூர் அரணைப்படையாய்! அண்ட கோடியெலாம் பயக்கும்
ஆரண அற்புதனே! அறிவாய் விபு ஆனவனே
சீருடன் ஆளவந்த திருமேனியைக் கண்டு கண்கள்
பேருலகில் பெரும்பே றன்று பெற்றுக் களித்தனவே"

எனவரும் பாம்பனடிகளின் அங்கப்பேறு பாசுரமும் இங்குக் கருதத் தகும்.

"வன்னிசேர் நுதல்கண் ஆறுடையோய்! கதிர்வடிவேல்
மின்னு பூங்கரனே! வானவ ரேத்தருள் விதுரா!
பன்னமார் சோலை மலைமனு! நின்னிலை பார்க்க
என்ன மா தவம் செய்துள்ளதோ எனது நல்விழியே"

என்பது பாடுமுறைப் பாடல்.

ஓசைக்கும் ஒலிக்கும் உயிர்ப்பான நாதவடிவ நம்பன், அகில வுலகிற்கும் ஆறுதல் வழங்க ஆறு சேயாய் அவனியில் வந்தான். விண்ணில் இயங்கும் கனிவுமிக்க கார்த்திகை மாதர், அருந்தவப் பேற்ருல் திருவருள் தூண்ட மண்ணில் வந்தனர். ஆறு சேய் களையும் ஆர்வத்தொடு எடுத்தனர். பாலூட்டித் தாலாட்டிப் பாராட்டிச் சீராட்டிப் பணி செய்தனர். அற்புதச் சேய்களின் ஆடல் நியதிகளை, அறிந்து மகிழ்ந்தனர்.

இச்செய்தி எவர்க்கும் நினைவில் என்றும் இருக்க அம்மங்கையர் மைந்தன் என்னும் பெயரையேன்றன ராதலின், 'நாதனும் கார்த்திகேயன்' என்றார்.

'மூக்கே நீ முரலாய் - முது காடுறை முக்கணனை
வாக்கே நோக்கிய மங்கை மணாளனை
மூக்கே நீ முரலாய்'

என்பது தமிழ்மறை.

இதனையன்றி, விஷய வாசனைகளை மோந்து கொண்டிருப்பது முறையன்று எனல் பெறப்பட்டது. கார்த்திகை மாதர், தம் மைந்தன் என்னும் சிந்தனையில் உச்சி மோந்து உள்ளம் குளிர்ந்தவாறு, நாதன் அருள் மணத்தையே மோந்துகொண்டிருக்குபம்டி என் மூக்கை காக்கவேண்டும் என்பார், 'நாசியை நயந்து காக்க' என்றார்.

சிரம் பிரமரந்திரமாதலின், அதை முதற் பாட்டிலும் நெற்றியும் புருவமும் கண்களும் நாசியும் தியானத்தில் ஊன்றும் இடங்களாதலின், அவைகளை இப் பாசுரத்திலும் குறிப்பிடுகின்றார் எனல் இங்கு எண்ணத்தகும்.

"அன்னையாய் அயனும் அனுதினம் வழிபடும் அடியேன்
தன்னுள்ளே உணர்வாய் சுடர்ப்பொருளாயுள்ள சாமீ!
முன்னைசேர் சோலை மலைமனு! நின்சரண் முகக்க
என்னமா தவம்செய் துள்ளதோ எனதுநல் மூக்கே"

என்பது பாம்பனடிகளின் திருச் சோலைமலைப் பதிகம்.

இருசெவி களையும் செவ்வேள் இயல்புடன் காக்க வாயை
முருகவேள் காக்க நாப்பல் முழுதுநல் குமரன் காக்க
துரிசறு கதுப்பை யானைத் துண்டனர் துணைவன் காக்க
திருவுடன் பிடரி தன்னைச் சிவசுப்ர மணியன் காக்க. 3

(ப-ரை.) செவ்வேள் - முத்தி விருப்பளிக்கும் முதல்வன்; இரு செவிகளையும்-, இயல்புடன் காக்க-

இயற்கை நியதியின்படி காப்பதாக; முருகவேள் – பேரின்ப வேட்கை பிறப்பிக்கும் பெருமான்; வாயைக் காக்க–, நல்குமரன் – நலஞ் சிறந்த குமரன்; நா பல் முழுதும் காக்க – நாவையும் பற்கள் அனைத்தையும் பாதுகாப்பதாக; யானைத் துண்டனார் துணைவன் – துதிக்கையை யுடைய யானைமுக கணபதியின் பின்னவன்; துரிசு அறு கதுப்பைக் காக்க – களங்கம் அற்ற கன்னங்களைக் காப்பதாக; சிவசுப்ரமண்யன்–, பிடரி தன்னைத் திருவுடன் காக்க – புறங்கழுத்தைப் பெருமிதம் விளங்கப் புரந்து அருள்வதாக, (எ-று.)

செவ்வேள் – செவ்வொளி யாகி வித்தக ஆன்மாக்களால் விரும்பப்படுபவன் எனப் பொருள்படும் அழகிய தமிழ்ச்சொல். கருநிறம் கணித்து மதனனைக் கருவேள் எனல் போல், செந்நிறம் கணித்து முருகனைச் செவ்வேள் எனல் மரபு.

கருவேள் – தன் உருவால், தன் தந்தை யுருவும் கருப்பெனக் காட்டுவன். செவ்வேள் – தன் செஞ்ஜோதித் திருவுருவால், தன் தந்தை யுருவும் பேரொளிச் செவ்வுரு எனலை உணர்த்துவன்.

கருவேள் – தன் அநங்கன் எனும் பெயரால், தனக்கு உடம்பு உண்டாக்கும் ஆற்றல் தன் தந்தைக்கு இல்லையெனல் காட்டுவன்.

செவ்வேள் – தனது வலியால், தன் தந்தைக்கு எல்லாம் வல்ல ஆற்றல் உண்டு எனலை அறிவிப்பன். கருவேள் – தன் தொழிலால், தன் தந்தையையும் மாயோனெனக் காட்டுவன்; செவ்வேள் – தன் தொழிலால், தன் தந்தை மாயாதீதன் எனலை மெய்ப்பிப்பன்.

கருவேள் – ஆன்மாக்கட்குப் பெத்த மங்கையில் இச்சை யெழுப்புவன்; செவ்வேள் – ஆன்மாக்கட்கு மோட்ச மங்கையில் இச்சை மூட்டுவன்; ஜோதி சொருபமா யிருப்பவன் செவ்வேள் எனவாம் என வரும் ஸ்ரீ சுப்ரமண்ய வியாசம் இங்கு கருதத் தகும்.

''செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்
செல்வத்துள் எல்லாந் தலை''

என்று பொது வேதம் புகல,

''செவிகாள் கேண்மின்களோ-சிவன் எம்மிறை செம்பவள
எரிபோல் மேனிப் பிரான் திறம் எப்போதும்
செவிகாள் கேண்மின்களோ''

எனும் சிறப்பான தமிழ் மறை, செவிகள் செய்ய வேண்டுவன இவை யென்று குறிப்பொடு விதி கூறுகின்றது.

கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டையென வாழும் உயிர்கட்கு வகுத்தநெறி நான்கு. அவைகளுள், முதற்கண் இருக்கும் இறைபுகழ் கேள்வி வேட்கை மிகுமேல், வீடுபேறு விளையும். செயற்கைப் பாழில் செவிகள் சேராவண்ணம், செவ்வேள் பெருமான், தன்புகழே கேட்கும் அவ் இயற்கை வாழ்வில் செவிகளைக் காப்பதாக என்பது முதலடியின் கருத்து. செவிக்கும் செவ்வேட்கும் ஒற்றுமை யிருப்பதைத் தொனியாலும் உணர்க. செவி - சேவிக்கும் தன்மையுடையது ; சேவித்தல் - சிரவணித்தல். மற்று, இயல்புடன் என்பதைச் செவ்வேளுடன் இயைத்து, தனக்கே உரிய இயல்புடன் எம் செவிகளைச் செவ்வேள் காப்பதாக எனினுமாம். இங்கு இயல்பாவது - உபதேசக் கிரமம்.

''வாச நறுங்கடப்பா! எழில் வாள்மணி யார்சிலம்பா!
தாச னெடுத்தஇந்தச் சன னம்கடைத் தேறிடுமா
தேசிக வாக்கியமாச் செப்பக் கேட்டென தஞ்செவி தான்
பேசற் கரும்பேற்றை யிம்பர்ப் பெற்றுக் களித்தனவே''

''சென்னிநா லுடையான் அனுதினம் பழிச்சிடு தெய்வம்
என்னவே துலங்கிப் பவளத்தின் திரளென இயங்கும்
நென்னடைச் சோலை மலைமுனு! நின்மொழி கேட்க
என்னமா தவம்செய் துள்ளதோ எனதுநல் செவியே''

எனும் திருவலங்கல் திரட்டு இங்கு எண்ணத் தகும்.

அழகு, இளமை, இன்பம், தேன், மணம் எனும் பொருள்களைக் கொண்டுளது முருகு எனும் பகுதி; அவைகளை யுடையவன் முருகன். தன்னை வழிபடு வார்க்கு அப் பேறுகளைத் தருகிறான் அத் தற்பரன். மலம் கழுவி, அழகு படுத்தி, இளமை யளித்து, இன் பத் தேனூட்டி ஆன்மாவை மணந்துகொள்ளும் அத்தனை, 'முருகவேள்' என்று ஓயாமல் ஓதுவதே வாய்க்குரிய வாய்ப்பு. அப்பேறு பிறழாதபடி என் வாயைக் காப்பதாக என்பார், 'வாயை முருகவேள் காக்க' என்றார்.

"வாயே வாழ்த்து கண்டாய்-மத யானையுரி போர்த்து
பேய்வாழ் காட்டகத் தாடும்பி ரான்றன்னை
வாயே வாழ்த்து கண்டாய்"

என்பர் அப்பர்.

'சிவன் திருப்புகழை ஓதாத வாயே திணிந்த மூங்கை'

என்பது காஞ்சிப் புராணம்.

மாரனால் விளையும் காமத்தை மாற்றுபவன் கு - மாரன்; மரணம் தவிர்ப்பவன் எனவும் பொருள் தருகின்ற நாமம் அது; கு - குற்சிதம் எனவாதலின். அநியாய மலப்பிணிப்பை அவிழ்ப்பவன், அப்பெயர்க் குரிய பெருமான் எனலும் ஆம்.

குமாராய நமః என ஆர்வத்தொடு அந்நாமத்தை உருவேற்றினர், அன்று உமை மணாளர் எனக் காந்தம் கூறுகின்றது. அவரைப் பின்பற்றிப் பல முநிவர்கள் அந் நாம ஜெபம் செய்துகொண்டிருக்கிற வரலாற்றைப் பல நூற்கள் இன்றும் பறையறை கின்றன.

முப்பத்திரண்டு பற்களில் ஒன்றிலேனும் பட்டுக் கொள்ளாமல் தப்பித்து வாழ்கின்றது நாக்கு. பற்க ளும் நாக்கும் பண்டங்களை மென்று பதம் பார்ப்பதும், உதவாக்கரையான மொழிகளை உளறி வழிவதுமே

தொழிலாயுள இந்நிலை, இன்றைய உலகின் இயல். இந்நிலை மாறி, முதிர் தவம்மிக்க முன்னோர் போல, நமக் குமாராய என்னும் நாமம் என்றும் நவிலும்படி, என் 'நாப்பல் முழுதும் நல்குமரன் காக்க' என்றார்.

"மின்னுவா னவர்மன் மயிலென வரஅதன் மேலே
உன்னி யேறி மகா நிசிசரர் உயிர்தொலைத் துள்ளோய்!
மன்னுமா சோலை மலைமன! நின்னடி வாழ்த்தற்கு
என்னமா தவம்செய் துள்ளதோ எனதுநல் நாவே"

எனும் திருச்சோலைமலைப் பதிகமும்,

"ஆதித்த னும்பரிதி தலம் யாவும் விளக்குதல் போல்
தீதற்ற மெய்யடியார் சிந்தை தன்னை விளக்கி உண்மை
போதிக்கும் பாவகியே! உனைப் போற்றிப் பழிச்சிஎன் நாப்
பேதிப் பிலாப்பேற்றை யிம்பர்ப் பெற்றுக் களித்தனவே"

எனும் திருவலங்கல் திரட்டும்,

"நாக்கைக் கொண்டரன் நாமம் நவிற்றிலார்" எனும் அப்பர் தேவாரமும், நான் மறக்கினும் சொல்லும் நா நமச்சிவாயவே" எனும் சுந்தரப் பெருமான் தமிழ்மறையும் இங்கு நினைவிற்கு வருகிறதல்லவா!

குமரன் வயது பதினாறு; அப்பருவத்திற்குத் தக்கபடி, நாவும் பல்லும், உரமும் நயமுமாக இருக்கும்; தன் பல்லிற்கும் உரம் வேண்டுவார், குமரி நாமத்தால் கூவிக் காப்பு வேண்டுகின்றார். என்று குறித்தலும் ஒருவகை.

அறிவை விட்டு அகலாத இன்பம், மெய்ம்மையின் வீரியமாக வெளிப்பட்டால், பீடுடைய கணபதி யென்ற பெயர் பெறும். மெய்ம்மையை நீங்காத இன்பம், அறிவின் வீரியமாக உதயம் செய்தால், விசாகன் என்ற பெயர் பெறும். அந்த அருமையை "யானைத் துண்டனார் துணைவன்" என்பதில் பெற வைத்தார்.

விக்கினந் தவிர்க்கும் வேழமுகர் திருமுன், தடபடெனக் குட்டிக் கொளற்கு இடமான கன்னங்கள், துரிசறு எனும் அடை பெறுகின்றன. அக் கன்னங்களை ஆனைமுகர் துணைவர் காத்தருள்க எனும் மூன்றும் அடி, என்றும் ஊன்றி யெண்ணப் பெறும்.

பிறந்து வளர்ந்து, தவம் பெருக்கிப் பிரமணியராயினர் பலர்; அங்ஙனம் இன்றிப், பிரமக் குழவியாயினவன் என்பார் 'சிவசுப்ரமண்யன்' என்றனர்.

முதுகந் தண்டின் ஆரம்பமாய், மேற்சொன்ன உறுப்புகட்கு எல்லாம் இடமான தலைக்குப் பீடம் போல இருந்து தாங்கும் புறங்கழுத்து, விசுத்திக்கான அருட்பேறு விளங்கப் பெறுமேல், வளர்ந்து என்றும் அது வாழுமாதலின், 'திருவுடன் பிடரி தன்னைக் காக்க' என்றார். (3)

ஈசனும் வாகு லேயன் எனது கந்தரத்தைக் காக்க
தேசுறு தோள்வி லாவும் திருமகள் மருகன் காக்க
ஆசிலா மார்பை யீரா(று) ஆயுதன் காக்க என்றன்
ஏசிலா முழங்கை தன்னை எழில்குறிஞ் சிக்கோன் காக்க. 4

(ப-ரை.) ஈசன் ஆம் வாகுலேயன் - கனிந்த அருள் செல்வனான கார்த்திகை மைந்தன்; எனது கந்தரத்தைக் காக்க - என்னுடைய கழுத்தைக் காப்பதாக; திருமகள் மருகன் - மலர்களின் மருமகன்; தேசு உறு தோள் விலாவும் காக்க - ஒளியமைந்த இரு தோள்களையும் (இரு பக்கத்து) விலாக்களையும் காப்பதாக; ஈராறு ஆயுதன் - பன்னிரு ஆயுதங்களையுடைய பரமன்; ஆசு இலா மார்பை காக்க - பழுதில்லாத (என்) மார்பைப் பாதுகாப்பதாக; எழில் குறிஞ்சிக் கோன் - எழுச்சியுடைய மலைநிலங்களின் அதிதெய்வ இறைவன்; ஏசு இலா முழங்கை தன்னை

காக்க - இகழ்தற்கு இடமில்லாத (என்) முழங்கைகளை (இனிது) காப்பதாக, (எ-று.)

வாகுலை என்பது, மகத்தான கார்த்திகையின் மற்றொரு பெயர்; ஈசனும் வாகுலேயன் - (கமுகு ஒத்த கழுத்தை யுடைய) கார்த்திகை மாதர் மைந்தனான கடவுள் எனும் பொருளையே கொண்டது.

நெஞ்சக் குழியும், அதன்மேல் மணி யமைப்பான தண்டு முடையதாய், கந்தப்பரமனை எப்புறமும் காணத் திரும்பும் என் கழுத்து, இனிய அந்த ஈடு பாட்டில் என்றும் இருக்க அருள்வதாக என்பார், 'எனது கந்தரத்தைக் காக்க' என்றார்.

திருமகளின் மகளிர்தம் தோள்களையும், அவர் தம் இரு புறங்களையும் தழுவும் தெய்வப் பெருமான், தன்னைத் தொழுதற்கு உரியவை யாம்படி என் இரு தோள்களையும், தான் தழுவுவதற்கு உரியதாம்படி எனது இருபுற விலாக்களையும், கவினும் ஒளிவிலாசமாக்கிக் காப்பதாக என்பது இரண்டாம் அடியின் கருத்து.

கந்தன் இருக்கும் இதயத்திற்குக் காப்பாயிருக்கின்றது மார்பு. அதனால், 'ஆசிலா மார்பு' எனப் பெறுகின்றது. இதயத் தியானத்திற்கு இடையூறு நேராதபடி, அசுர குணங்களை யடக்கப் பன்னிரு படைகளை யுடைய பரமன், களங்கமற்ற என் மார்பைக் காப்பதாக என்பது மூன்றும் அடியின் செய்தி.

வண்மை மிகுந்து நிமிர்ந்து வணக்கத்திற்கு வளையும் முழங்கை, 'ஏசுஇலா' எனும் அடை பெறுகின்றது. மகத்தான உரம் மிக்க மலைகட்கு உரியவன், என் முழங் கைகட்கு உதவ முன் வருவதாக என்பார், 'முழங்கை தன்னை குறிஞ்சிக்கோன் காக்க' என்றார். (4)

**உறுதியாய் முன்கை தன்னை உமையிள மதலை காக்க**
**தறுகண் ஏறிடவே என்கைத் தலத்தைமா முருகன் காக்க**
**புறங்கையை அயிலோன் காக்க பொறிக்கர விரல்கள்பத்தும்**
**பிறங்குமால் மருகன் காக்க பின்முது கைச்சேய் காக்க. 5**

(ப-ரை.) உமையிள மதலை - பிரணவ வடிவி யின் இளம் பிள்ளை யானோன்; முன் கை தன்னை - முன்னங் கைகளை; உறுதியாய் காக்க - அதிவயிரமாக அமையும்படி அருள்வதாக; மா முருகன் - மகிமை யுடைய முருகன்; என் கைத் தலத்தை - என் கைகள் முழுமையையும்; தறுகண் ஏறிடவே காக்க - அஞ் சாமை மிகும்படி அருள்வதாக; அயிலோன் - வேல் இறைவன் புறம் கையைக் காக்க-, பிறங்கும் மால் மருகன் - (என்றும்) விளங்கும் திருமால் மருகன்; பொறிக்கர விரல்கள் பத்தும் காக்க - (தொழில்) கருவியான என் பத்துக் கை விரல்களையும் பாது காப்பதாக; சேய் - செவ்வொளி இளந் தெய்வம்; பின் முதுகைக் காக்க - பின்புறமான முதுகைக் காப்ப தாக, (எ-று.)

உ-ம்-அ—உமா ; இப்பெயர், சாந்தமான பிரணவ சொருபப் பெருமாட்டி யெனும் பொருளது.

> "ஓங்காரி யென்பாள் அவளொரு பெண்பிள்ளை
> நீங்காத பச்சை நிறத்தை யுடையாள்
> ஆங்காரி யாகியே ஐவரைப் பெற்றிட்டு
> ரீங்காரி யாகி யினிதிருந் தாளே"

எனும் திருமந்திரம் இதை யுணர்த்தும். உமையிள மதலை - குதலை மொழி யுரைக்கும் உமையின் இளங் குழவி. மதலை - வேத நுட்பத்தை இனிக்க இயம்பும் நடை. உத்தம அடியவர்க்கு உதவவும், முருக வழி பாட்டிற்கு முந்தவும் 'முன்கை தன்னை உறுதியாய்க் காக்க' என்றார்.

"கைகாள் கூப்பித் தொழீர்—கடிமாமலர் தூவி நின்று
பைவாய்ப் பாம்பரை யார்த்த பரமனைக்
கைகாள் கூப்பித் தொழீர்"

என்றார் அப்பர் அடிகள்.

"எங்கை உனக்கல்லா தெப்பணியும் செய்யற்க"

என்றார் வாதவூரடிகள்.

"பூக்கைக் கொண்டரன் பொன்னடி போற்றிலார்
காக்கைக்கே யிரையாகிக் கழிவரே"

என்பதும் தமிழ்மறை.

இத் தீர்ப்பின்படி, முன் பாட்டில் தோள்களையும் முழங்கைகளையுங் கூறி, முன்கை, புறங்கை, கை விரல்கள் முதலியன உயர்ந்த வழிபாட்டில் ஈடுபட உதவியருள் என்ற வேண்டல் இப்பாட்டில் வெளிப் பட்டது. இவைகட்கு அமைந்த அடைமொழிகளும் அதனை அறிவுறுத்தியதென்க. திறுகண் - பின் வாங்காத ஆண்மை; ஏறுதல் - முன்னேற்றத்திற் குரிய வூன்மை வளர்தல்.

மாமுருகன் என்றதற்கேற்ப, 'தறுகண் ஏறிடவே' அருள் என்ற நயம் எண்ணி யின்புறற் குரியது. புறங்கை - உள்ளங்கையின் மறுபுறம். குவித்துக் கும்பிடும் காலத்தில் புறங்கைகள் தான் புலனாகும். இனியவேல் இறைவன், பணிமுகத்தில் என்றும் இருக்கப் புறங்கைகட்குப் புகலளிப்பதாக என்றார்.

. பத்து அவதாரம் எடுத்த திருமாலின் மருகன், என்றும், இறை வழிபாட்டில் ஈடுபடும்படி கை விரல் கள் பத்தையும் காப்பதாக என்பார். 'கரவிரல்கள் பத்தும் பிறங்கும் மால்மருகன் காக்க' என்றார்.

2

"முன்னைப் பழம் பொருளே! முழுமூலச்சிவக் கொழுந்தே
என்னுள் கணே யிருந்தே எனக்(கு)இன்பிசைக்கும்
[பொருளே!
கொன்னழ குன்னடியை நனி கூப்பியென் கையிரண்டும்
பின்னமிலாப் பேற்றை யிம்பர்ப் பெற்றுக் களித்தனவே"

என்றும்,

"பின்னை கேள்வன் அயன் பிறங்கெழில் முனிவரர் பிறரும்
உன்னியே கணித்தற்கு அமைவறு பெருந்தகை
[யுடையோய்
துன்னுமா சோலை மலைமனு! நின்சரண் தொழமுன்
என்னமா தவம் செய் துள்ளதோ எனதுநல் கரமே"

என்றும் பாம்பனடிகள், கைகளின் பயனை மற்றோர் இடத்தில் கூறிக் களித்தலை இங்குக் கருதல் நலம்.

முன்னிருக்கும் புறப்பொருள்களை, கண்முன்னே காண இயலும்; பின் இருக்கும் பொருள்கள் பெரிதும் தோன்ற; ஆதலின் இள ஒளி ஞாயிறன இறைவன், பின்புறமான முதுகைப் பேணுவானாக என்பது, 'பின் முதுகைச் சேய் காக்க' என்பதில் வெளியாம். (5)

ஊன்நிறை வயிற்றை மஞ்ஞை யூர்தியோன் காக்க வம்புத்
தோள்நிமிர் சுரேசன் உந்திச் சுழியினைக் காக்க குய்ய
நாணினை அங்கி கௌரி நந்தனன் காக்க பீஜ
ஆணியைக் கந்தன் காக்க அறுமுகன் குதத்தைக் காக்க. 6

(ப-ரை) மஞ்ஞை ஊர்தியோன் - மயிலூரும் பெருமான்; ஊண் நிறை வயிற்றைக் காக்க - உணவை நிறைக்கும் வயிற்றைக் காப்பதாக; வம்புத் தோள் நிமிர் சுரேசன் - தெய்வமணம் கமழும் எடுப்பான தோள்களையுடைய தேவர் பெருமான்; உந்திச் சுழியினைக் காக்க - (வயிற்றில்) சுழித்த கொப்புளை வாழ்விப்பதாக; அங்கி கௌரி நந்தனன் - அக்கினி

கர்ப்பன் ஆன பார்வதியார் பாலன்; குய்ய நாணினைக் காக்க - கருவாய் ஆன (வில்) நாணி போன்ற குறியைக் காப்பதாக; கந்தன்–, பீஜ ஆணியைக் காக்க- விரை (நடுவில் விளங்கும்) நரம்போட்டத்தைக் காப்பதாக; அறுமுகன் குதத்தைக் காக்க - அறுமுகப் பரமன் எருவாயான குதத்தைக் காப்பதாக, (எ-று.)

உண்ணப்படுதலின் உணவு ஊண் எனவாயது. உண்ட உணவு ஜீரணமானதும், மீட்டும் உண்பது இயற்கை. அதனாற்றான், 'ஊண் நிறைவயிறு' எனப் பெற்றது. மயூரவாகனா! வழிபடுவார் வயிறு குறையாதபடி வாழ அருள்; நிறைவாலும் குறைவு நேராதபடி நியதி செய் என்பது குறிப்பு. மயூரம், வயிறு என்பவற்றின் தொனியிலும் ஒப்புமையோர்க.

சுர - ஈசன்–சுரேசன்; சுரர் - அமுதம் பருகியவர்; ஈசன் - (அவர்கட்கு) அதிபன். மலை போல் வளர்ந்த தோளுடையான், வானவரை வாழ்வித்த மன்னன் என்பார், 'தோணிமிர் சுரேசன்' என்றார். உந்திச் சுழி - சுழித்த உந்தியென முன் பின்னாக மாற்றுக. இது மணிபூரகத் தானம். தாமோதரன் உருவில் கந்தன் தங்கும் இடமான உந்திச்சுழி, துதி முகத்தில் கொதிப்பேறிச் சுருங்காமல், கம்பீரமாக விளங்கும் படிக் காப்பளிப்பதாக என்பார், 'உந்திச் சுழியினைக் காக்க' என்றார்.

நந்தனன் என்பது, கடைநிலைத்தீபகம்; அங்கி நந்தனன், கௌரி நந்தனன் என இயைத்து, சிவந்த ஞானக்கினியன் சேயானை தட்பம் மிக்க பசுமை நிறப் பார்வதியின் பாலன், நாணியான குறி, உடல் மெலிவின் அறிகுறியாய் உலர்ந்து போகாதபடி உதவுவதாக என்பது மூன்றாம் அடியின் செய்தி.

கந்தன்—ஒருமை தரும் பெருமான் எனப் பொருள்படும் வடசொல். இருபகுதியான பீஜத்தை

ஒன்றுபடுத்தும் தண்டு, இருந்து தியானிக்கும் அமயம் இடையூறடையாதபடி அப்பரமன் அருள்வ தாக என்பார், 'பீஜ ஆணியைக் கந்தன் காக்க' என்றார்.

வெம்மை மிக்கு மலவாயில் கரியுமேல், வழிபாட் டில் தடை வரும்; அங்ஙன மாகாதபடி, கிழக்கு மேற்கு தெற்கு வடக்கு கீழ் மேல் என்னும் ஆறு முகத்தும் நிறைந்த ஞானகாய நிமலன், எருவாய் இடத்தைக் காலம் தவறாதபடி காப்பதாக என்பார், 'அறுமுகன் குதத்தைக் காக்க' என்றாரென்க. (6)

**எஞ்சிடா(து) இடுப்பை வேலுக்(கு) இறைவனார் காக்க காக்க**
**அஞ்சகனம் ஓர் இரண்டும் அரன்மகன் காக்க காக்க**
**விஞ்சிடு பொருள் காங்கேயன் விளரடித் தொடையைக் காக்க**
**செஞ்சரண்நேச ஆசான் திமிரும்முன் தொடையைக் காக்க. 7**

(ப-ரை.) வேலுக்கு இறைவனார் - ஞான சக் திக்கு அதிபர்; எஞ்சிடாது இடுப்பைக் காக்க காக்க - களைப்படையாதபடி இடுப்பை என்றும் காப்பாராக; அரன் மகன் - சிவகுமரன்; அம் சகனம் ஓர் இரண் டும் காக்க காக்க - அழகிய பிருஷ்டபாகம் இரண் டையும் என்றும் காப்பதாக; விஞ்சிடு பொருள் காங் கேயன் - பெரிய மெய்ப்பொருளான கங்கை மைந்தன்; விளர் அடித் தொடையைக் காக்க - (இரண்டாகப்) பிரிந்த அடிபாகத் தொடைகளைக் காப்பதாக; செம்சரண் நேச ஆசான் - சிவந்த திரு வடிகளையுடைய (ஆன்ம) நேய குருநாதன்; திமிரும் முன் தொடையைக் காக்க - வலிமைமிகும் தொடை யின் முன் பாகத்தைக் காத்தருள்வதாக, (எ-று.)

சலிப்படைந்து சாயாமல், இருந்து தியானிக்க இடுப்பிற்குப் பலம் வேண்டும்; ஆதலின் பின் வாங்

காத ஞான சொரூபமாக நிமிர்ந்திருக்கும் வேலேந்திய ஹின்மலன், கனத்த உரம் தந்து என் இடுப்பைக் காப்பதாக என்றார்.

ஹரித்தல் செய்பவன் ஹரன்; ஹரித்தல் - மல கண்டனம் செய்தல்; அந்த மலகண்டன சிவகுமரன், இருந்து வழிபடும் காலத்தில் பிருட்டம் இரண்டினும் கடும் வெம்மை மிகாதபடி காப்பதாக என்றார்.

கங்கை தநயனாக மிக்கெழுந்த மெய்ப் பொருள், நான் கமலாசன இன்பாசனமிட்டு எண்ணும் அமயம், நோவுருதபடி, கனத்த முன் தொடைக்கு வன்மை தந்து காப்பதாக; அடிமலர்களில் அன்பு வைத்த வர்க்கு வழிகாட்ட ஆசாரியனாக வருபவன், வன்மை மிக்க முன் தொடையை வாழ்விப்பானாக என்றும் கூறினார். காங்கேயன் - கங்கை தநயன்; வட்சொல்; தத்திதாந்தநாமம். (7)

ஏரகத் தேவன் என்தாள் இருமுழங் காலும் காக்க
சீருடைக் கணைக்கால் தன்னைச் சீரலை வாய்த்தே காக்க
நேருடைப் பர(டு) இரண்டும் நிகழ்பரங் கிரியன் காக்க
சீரிய குதிக்கால் தன்னைத் திருச்சோலை மலையன் காக்க. 8

(ப - ரை.) ஏரகத் தேவன் - (இதயகமலத்) திருவேரகத் தெய்வமானோன்; என் தாள் இரு முழங்காலும் காக்க - எனது கால்களில் உள்ள முழங்கால்கள் இரண்டையும் காப்பதாக; சீரலை வாய்த்தே - திருச்செந்தூர் ஆண்டவன்; சீர் உடை கணைக்கால் தன்னைக் காக்க - சிறப்புடைய கணைக் கால்கள் இரண்டையும் காத்தருள்வதாக; நிகழ் பரங்கிரியன் - விளங்கும் திருப்பரங்குன்றத் திரு வாளன்; நேர் உடை பரடு இரண்டும் காக்க - நேராகப் படர்ந்திருக்கும் இரு பரடுகளையும் காப்பு

தாக ; திருச்சோலை மலையன் - பழமுதிர் சோலைப் பரமன்; சீரிய குதிக்கால் தன்னைக் காக்க - (கவினிச்) சிறந்த குதிக்கால்களைக் காப்பதாக, (எ - று.)

வழிபாட்டுத் தியானத்தில் வாழ்பவர்க்கு, முழங்காலில், கணைக்காலில், பரடுகளில், குதிக்காலில் வலி பிறவாதபடி வன்மை நிலைக்கப் பிரார்த்தித்தபடி. முழம் அளவில் வளர்ந்தகால் முழங்கால் எனப் பெறும். கணை - திரண்டு உருண்ட வளமைத்திறம். குதிக்கால் - பாதப் பின்புறம். ஆறுபடை வீடுகளில், நான்கு படைவீடுகளை பக்தியொடு மனனம் செய்த பாசுரம் இது.

ஏரகம் - ஸ்வாமிமலை யெனும் தெய்வத் திருப்பதி ; இது கும்பகோணத்திற்கு அருகில் உள அநாதி அற்புதத்தலம். சிவனுர்க்கு ஓம் பொருளை உபதேசித்த கோலம் இங்கு உளது ; நிலமகளின் இதய கமலம் இப்பதி யென்று புகல்கின்றது புராணம். ஏரகம், இரு முழங்கால் எனும் மோனையைப் பலதரம் உச்சரிக்க உச்சரிக்க உவகை உள்ளத்தில் உதிக்கும். பிண்ட தத்துவத்தில் அநாகதத்தலம் இது என்பர் யோகிகள்.

சீர் அலைவாய் - சிறந்த அலைகளையுடைய கடலின் கரைமேல் இருக்கும் தலம் ; திருச்செந்தூர்க்கு இப்படியும் ஒரு பெயர் உளது ; இது சுவாதிட்டான க்ஷேத்திரம். சீருடைக் கணைக்கால் சீரலை வாய்த்தே எனும் மோனையை ஊன்றி உச்சரிக்கச் சுவை உதிக்கும் ; இது பாண்டி நாட்டுப் பழம்பதி.

பரங்கிரி - இது மூலாதார முதற்பதி ; பாண்டி நாட்டில் மதுரையை அடுத்த மாபெருந்தலம் ; இங்கு நிகழ்ந்தது தேவயானையார் திருமணம். பரிபாடல் எனும் சங்க நூலில் இதன் விவரம் விளங்க உளது.

பரடு - பரங்கிரி எனும் இவைகட்குத் தொனியள விலும் ஒற்றுமை யுளது எனலை ஓர்க.

சோலைமலை - பழமுதிர் சோலை என்பது இதன் முழுப் பெயர். பாதப் புறத்துள்ள குதிக்கால், ஊன்று தற்குப் பின்புறமாகி உதவுகின்றது. அதுபோல், அன்று முருகன் முன்புறக் கோயிலான பழமுதிர் சோலை, இன்று பின்புறமாகி, கள்ளழகர் கோயிலாய்க் காட்சி தருகின்றது. அதனை ஊன்றி உணர்ந்து, "சீரிய குதிக்கால் தன்னைத் திருச்சோலை மலையன் காக்க" என்றார் எனினும் அமையும். பழ முதிர்ச் சோலையன் என்றது சோலைமலையன் என்பதும், மலைவுக்கு இடம் தந்த பதி எனும் குறிப்பு என்க. ஆக்ஞைத் தலம் இது என்பது, அநுபவிகளின் பொன் மொழி.

"மின்னனந் தங்கோடி யென்னநடு வெளியிலெழு
மெய்ஞ்ஞான ஆதிக்கமே";

"வெம்மையற் றுண்மையுணர் வாம்விபுதர் அறிகின்ற
மெய்ப்பரஞ் சோதி வடிவே"

"வேதத்திலே சுப்பிர மணியோம் எனக்கிளரும்
மெய்ம்மொழிக் குரிய பொருளே"

"விரிவாய கருணையொ டிருக்கும் என் அப்பா! என்
விண்ணப்பம் அங்கிகரியாய்"

"வேர்மல்கு அகங்கார விடபியா திற்குமெனை
மெய்யடியில் வைக்க நினையாய்"

என்று திருவேரகத்து இறைவனைக் குமரகுருதாசர் பாடலிலும்,

"துடியிடைக் குறமா(து) அணிமடச் சுரமா
துடையருமா மணத் தோமா
நடமயில் பரியா பிரியகப் பிரியா
நாளடி தொழுநறும் பரனே

சுடர்மணித் தளையா அடலயில் தலைவா
துணிநிலைச் சீரலை வாயா
தடஅருள் புரளுா! உனைமறக் கினும்நா
சாற்றிடும் சரவண பவவே"

எனத் திருச்செந்திலாதிபனை,

"எந்தையே இறையே இணையருள் இலையேல்
இங்குயான் உய்ந்திலேன் அந்தோ
சிந்தைசேர் வானே திகழ்விழுப் பொருளே
திருப்பரங் கிரியுறை சிவனே
பந்தமே போக்கிப் பதஅரு ளாக்கிப்
பகலிரவு அணவிடா நிலையில்
சந்ததம் சேர்க்கத் தயவுசெய் யாயோ
சரவண சுயம்பெரு மாளே"

எனத் திருப்பரங்கிரித் தெய்வத்தைத் திருவலங்கற் றிரட்டிலும்,

"தொந்தபந் தத்தினை அகைத்தவறி ஞர்க்கினிது
சுடரொரு சிவக் கொழுந்தே
தொலையாத உற்பவப் பிணிதொலைய எதிர்வந்து
தோன்றுமரு மாமருந்தே
அந்தமடி யற்றசிற் பரவெளியில் நிகழுவோர்
அகமினிக் கும்கரும்பே
அன்பர்கள் உளப்பதும மலர் நடுவில் ஊறும் இன்
அளியருந் திடு சுரும்பே
எந்தெந்த நெறியிடை யிறங்கிவழி பட்டவரும்
ஈடேற வருவிருந்தே
இடைவிடா துன்னை நான் எண்ணியெண் ணிச்சித(டு)
எனுங்குரு(டு) ஒழிந்து கண்டே
தொந்தரை யிலாதசுக மும்சுகா தீதமும்
சொந்தமென நிற்க வந்(து) ஆள்
தோகைமயி லேறிநடம் ஆடுவளம் நீடுநல்
சோலைமலை மேவு குகனே"

எனச் சோலைமலைக் குமரனைக் குமரகுருதாசர் பாடலிலும் கூறிக் குதூகலிப்பதை ஓர்க. (8)

**ஐயுறு மலையன் பாதத்(து) அமர் பத்து விரலும் காக்க**
**பையுறு பழநி நாத பர(ன்) அகம் காலைக் காக்க**
**மெய்யுடல் முழுதும் ஆதி விமல சண்முகவன் காக்க**
**தெய்வ நாயக விசாகன் தினமும் என் நெஞ்சைக் காக்க. 9**

(ப - ரை.) ஐயுறு மலையன் - அழகு பொருந்திய குன்றுதோருடும் குமரன்; பாதத்து அமர் பத்து விரலும் காக்க - பாதத்தில் அமர்ந்த பத்து விரல்களையும் பாதுகாப்பதாக; பையுறு பழநிநாத பரன் - பசுமை பொருந்திய நாத வடிவினனான பழநியாண்டவன்; அகம் காலைக் காக்க - உள்ளங் கால்களைக் காப்பதாக; மெய் உடல் முழுதும் - மெய் என்னும் உடல் முழுமையையும்; ஆதி விமல சண்முகவன் காக்க - (எவர்க்கும்) முதல்வனான களங்கம் இல்லாத ஆறுமுகப் பெருமான் காத்தருள்வதாக; தெய்வ நாயக விசாகன் - தெய்வங்கட்கு எல்லாம் நாயகனான விசாகப் பெருமான்; தினமும் என் நெஞ்சைக் காக்க- ஒவ்வொரு நாளும் என் உள்ளத்தைக் காப்பானாக, (எ. று.)

நிலத்தை வேர்களால் தாங்கும் தெய்வீகமான குன்றுதோறும் இருந்து ஆடும் குமரேசன், ஊன்றி நடத்தற்கு உதவுகின்ற பாதவிரல்கள் பத்திற்கும் பலம் தருவதாக என்றார்; ஐ - தெய்வீகத்தன்மை. பர்வதங்கட்கு உரியவன் என் பத்து விரல்களையும் பாதுகாப்பதாக என்று ஊன்றி உணர்ந்து உரைக்கும் நுட்பம் ஓர்க. குன்றுதோருடலில் அடங்கிய ஒவ்வொரு மலைக்கோயில்களையும், விசுத்தித் தலக் கூறுபாடுகள் என்று விளம்புகின்றார் மேலோர்.

> "ஆர்கலிகள் நீர்சுவற அசலவன்
> சிலைதுகள்கள் ஆகி ஆகாசம் மூச
> அண்டபகிர் அண்டமெனும் உண்டைகள்
> குலுங்கவிறல் அட்டமத கரியிரட்ட

பார்முழுவதும் ஒருதலைப் பாரமா கக்கொண்ட
பன்னரா ஜேந்திர னெளியப்
பலபலென விண்மீனம் உதிரத் தயித்திய
பதாதியிறை நெஞ்சம் அஞ்ச
ஏர்மல்கு நெடியசதம் வீசிப் பறக்கு மயில்
ஏறும் குமார வீர!
என்றைக் கெழுந்தருளி வருவையோ?
என் தலையில் இணையடிப் பூவையிட்(டு)
வார்நிலையில் எந்நாளும் எம்மடிமை நீயென
வாய்மலர்ந் தமுது நல்க
மங்காத இன்பர்செறி குன்றுதோ ருடல்வதி
மஞ்சார் பெருந்தகையனே''

'கனைகழல் நிலவிடு சததள இணையடி
கருதிடு தவமுடையோர்
மனவெளி தனில்நடம் இடுமர ஹரசிவ
வடிவுடை அயிலரசே!
பனிமலி இதழவிழ் தொடைய லணிபரம
பலகிரி யுறைமுருகா
இனிமைசெய் புரிவுடன் எனையும் அடிமைகொள
இதுநல தருணமரோ'

எனவும் குன்றுதோருடல் குறித்து அடிகள் பிறிதோர் இடத்தில் செய்துள்ள வேண்டுகை, இங்கு நம் சிந்தனையில் உறுகின்றது அல்லவா!

சாந்த வடிவான கனிந்த அருளுடைக் கடவுள் என்பார், "பையுறு பழநி" என்றார். பை - அமைதி. நயனுர்ந்த நாத தெய்வமாதலின், 'நாதபரன்' என்றார். மற்று, பூதநாத வேதநாத ஆன்மநாதனை ஆண்டவன் எனினும் அமையும். மணிபூரகத்தில் அந்தரங்கமாக மன்னியிருந்து காப்பளிக்கும் கடவுளாதலின், 'பையுறு' எனும் அடையை முன்னும், பழநிக்குப் பின் 'நாதபரன்' எனும் சொற்களையும் பயிலவைத்தார். உள் முகமாகி உதவுபவன், என்

உள்ளங்கால்கட்கு உதவுவாருக என்பது குறிப்பு. மூன் பாட்டில் படைவீடுகள் நான்கையும் வடித்தவர், இப்பாட்டில் எஞ்சிய இரண்டையும் இயம்பினர் என்க.

"மன்னிவாழ் சோலை மலைமரு! நின் தலம் மிதிக்க
என்னமா தவஞ்செய் துள்ளதோ எனது நல்காலே"

எனும் திருச்சோலைமலைப் பதிகத்தையும்,

"மட்டங் குயக்குறத்தி மண வாளனே! தாழுநர்தம்
கட்டம் செகுப்பவனே! கருணாகர வேலவனே!
வட்டம் தரச்சூழவலம் வந்திரு தாள்களுமே
பெட்டில் அரும்பேற்றை இம்பர்ப் பெற்றுக் களித்தனவே."

எனவரும் அங்கப் பேற்றுப் பதிகப் பத்தையும் இங்கு எண்ணல் நலம். அடிகட்குப் பழநியிலுள்ள வேட்கையை,

"உந்தியிடை நின்றுன்னை யிடையுமா திருவுளத்
தொல்லையோர் எணம் கொளாயோ
உலகனைத்தும் புகழ் திருப்பழநி மலைமேவும்
ஓங்கார குரு நாதனே"

"ஊழிமுடி வெனநவிரம் ஏறுமுதல் வாஎன்றன்
ஊறு கெட என்று வருவாய்"

என்று குமரகுருதாசர் பாடலிலும்,

"சூடேன் நின்னடியை யின்றித் து தித்து நாவினைதையும்
பாடேன் ஏம்மானே பர மார்த்த சன்யாசீ
வாடா விண்மலரே யெனை வாவென் றேஅழையாய்
சேடார் தென்பழநித் திருக் கோவி லுள்ளாயே"

எனப் பாடுமுறை எனும் பகுதியிற் பாடியுள பரிசு பார்க்கத் தகுவது.

மல சம்பந்தம் உடையவன் யான்; கருமலம் கழல முயலற்கு வந்தவுடல் இந்த உடல். உலகிலேயே உறவாடி மயங்கியிருந்தால், இவ்வுடல் ஒருநாள் உள்ளீடில்லாததாகி ஒழிந்துவிடும். அப்போது 'காயமே இது பொய்யடா' என்று பாட வரும். அங்ஙனம் ஆகாதபடி, இவ்வுடல் உத்தம தெய்வ வழிபாட்டில் உறவு கொள்ளுமேல், மெய் எனும் பெயர் மேவும்; அதற்கு அருள்க அமலா என்பார், 'மெய்யுடல் முழுதும் ஆதி விமல சண்முகவன் காக்க' என்றூர். 'முழுதும்' என்பது இதுகாறும் கூறிவந்த கேசாதி பாதங்களைக் குறித்தது.

"அன்னம்ஊர் சோலை மலைமஞு! நின்பொடி யணிய
என்னமா தவம்செய் துள்ளதோ எனதுநல் உடம்பே"

என்பது திருச்சோலைமலைப் பதிகம்.

காய மெலா முனது கழ லைக்குரங் கிக்குரங்காப்
பேய்கள் பெருப்பேற்றையிம்பர்ப் பெற்றுக் களித்தனவே"

எனும் களிதறு. அங்கப்பேறு பதிகமும் இங்குக் கருதத் தகும்.

தெய்வம் பல; அவைகளின் நாயகன், விசாக புண்ணிய காலத்தில் சொருபத்தி லிருந்து தடத்த உருவம் தாங்கினனுகலின், 'தெய்வநாயக விசாகன்' என்றூர். புங்கமான இதயத்தில் தங்கும் அப்புனிதன், என் உள்ளத்தில் ஒருமை உதிக்க உதவுக என்பது, இறுதியடியின் வேண்டுகோள்.

தாங்கும் மலையன், தாங்கும் பாத விரல்களையும்; அந்தரங்கப் பழநியான், அகங்கால்களையும்; எல்லாம் ஆனவன், உடல் முழுமையையும்; நாயகன் நாயகமான உள்ளத்தையும் காக்க எனும் நயத்தை ஊன்றி உணர்க.

"அன்னவா கனனை அருஞ்சிறைப் படுத்திமெய் அறிவால்
பன்னகா பரணற்(கு) ஓம்முதல் பொருள்தனைப் பகர்ந்தோம்
கன்னல்சூழ் சோலை மலைமனு! நின்கழல் கருதற்(கு)
என்னமா தவம்செய் துள்ளதோ எனதுநல் மனமே"

எனவரும் திருச்சோலை மலைப் பதிகமும்,

"மூத்தர் முதுக்குறைவே சிவ மோன அருள்பரப்பே
எத்திசை யும்செறிந்த இறை யேஎனை ஆள்குகனே
நித்தலும் நின்சரணை என்றன் நெஞ்சம துள்கி உள்காப்
பித்தர் பெருப்பேற்றை யிம்பர்ப் பெற்றுக் களித்த தன்றே"

எனும் அங்கப்பேற்றுப் பதிகமும் இங்கு நம் நினை விற்கு வருகிறதல்லவா . (9)

ஒலியெழ உரத்த சத்தத் தொடுவரு பூத ப்ரேதம்
பலிகொள் இராக்க தப்பேய் பலகணத் தெவையானாலும்
கிலிகொள எனை வேல் காக்கக் கெடுபரர் செய்யும் சூன்யம்
வலியுள மந்த்ர தந்த்ரம் வருத்திடா(து) அயில்வேல் காக்க.

(பூ - ரை.) ஒலியெழ - எதிரொலி யெழும்படி; உரத்த சத்தத்தொடு வரும் - பெரும் கூச்சலுடன் வருகின்ற; பூதம்-, ப்ரேதம்-, பலிகொள் இராக்கதப் பேய் - பலிவாங்கும் இராட்சசப் பேய் (முதலிய); பல கணத்து எவையானாலும்-கொடிய பல கணங்களுள் எவையேயாயினும் ; கிலிகொள - (அவைகள் எனைக் கண்டு) அச்சம் கொள்ளும்படி ; எனை வேல் காக்க - அடியேனை வேல் படை காப்பதாக ; கெடுபரர் செய்யும் சூன்யம் - கெடுமதியாளர்கள் வைத்த சூன்யம் : வலியுள மந்த்ர தந்த்ரம் - வலிமையுடைய மந்திர தந்திர ஜாலங்களும், வருத்திடாது அயில் வேல் காக்க - (என்னைத்) துன்புறுத்தாதபடி ஞான வேல் காப்பாற்றுவதாக, (எ - று.)

இனிமையான சிற்ருெலியை யெழுப்பி, வரவர அதனைப் பேரொலியாய் வளர்த்து, இறுதியில் பயங்கர சத்தத்தைப் பரப்பும் பாழும் பூதங்கள் ஒரு புறம் ; அதே அமயம், பேரதிர்ச்சியுடன் நிலம் கிழித் தெழுகின்ற பிரேதங்கள், அந்தோ என்ன வேதனை! அஞ்சிநடுங்கும் அவ்வமயம், ஊட்டியைப் பிடித்து உதிரத்தை உறிஞ்சும் இராட்சசப் பேய்கள் முதலிய தீய கணங்கள் இவ்வுலகில் இருக்கின்றன. எண்ணு ஞலும் கிலி யெய்துகின்றது. கிலியை விளைவிக்கும் அவைகள் கிலிகொண்டு ஓடும்படி, கருணையுடன் அச்சமயத்தில் வேல் வந்து என்னைக் காப்பதாக என்பது முற்பகுதியின் செய்தி.

காரணம் இன்றியேயும் கெடுதி விளைவிக்கும் பகைக் குணம் படைத்த பல்லோர், இவ்வுலகில் இன்றும் இருக்கின்ருர். துஷ்ட தேவதைகளை உபா சித்துச் சித்தி பெற்ற அன்னோர், சாதனையைப் பதம் பார்க்கும் அநியாயச் சீர்பால், தக்கார்க்கு ஏதம் விளைவிக்கும்படி அத்தேவதைகளைச் சூழ ஏவுவது சூன்யம். மந்திரம் கால் மதி முக்கால் என்பது போல், அதைச் சார்ந்து செய்யும் தந்திர ஜாலங் களும் பல. இறை வழிபாட்டி லீடுபட்டிருக்கும் எளியேனை இவைகள் வந்து நலியா வண்ணம், கனிவு மிக்க வேல், அவ்வமயம் வெளிப்பட்டு அருள் வதாக என்பது கருத்து. சூன்யம்—மாரண வித்தை என்றும் உரைக்கப்பெறும்.

பூதச்செய்தி :—தேவ, அசுர, காந்தர்வ. யட்ச, சர்ப்ப, ராட்சச, கூஷ்மாண்ட, காம, கிரகண, வேதாள, பிரமராட்சச, யதாகாரிஷ, அர்த்தபிதா, பைசாச, ருகு, விருத்த, சித்த, முனி முதலிய பதி னெண் வகைப் பூதங்களை அரிய மந்திர நூற்கள் அறிவிக்கின்றன.

படிகத்தில் படும் பரிதியின் கிரணம் போல், மேல் கூரையின் மூலம் வீட்டுள் விழும் ஒளிக்கற்றை போல் பரவிவந்து இவைகள் மக்களைப் பற்றும், ஒவ்வொன்றும் ஒவ்வொரு போக்குடையனவாய், விபரீத உபத்திரவம் விளைவிக்கும் என்ப.

ப்ரேதச் செய்தி :—தர்மத்தை மறுத்து, குளத்தைத் தூர்த்து, நீரில் வீழ்ந்து, இடிவீழ்ந்து, நெருப்பாலும், மாடு முட்டியும், விடம் பருகியும், பிதுர்த் தர்ப்பணம் செய்யாதும் இறந்த பலர் பிரேதப் பிறப்பை யடைவர் என்பர்.

பேய்ச் செய்தி :—காற்று உருவாக வரும் பேய்கள் பல ; அவைகளுள், இராட்சசப் பேய்கள் அதி பயங்கரம் ஆனவை. ஒன்றன்பின் ஒன்றாய் வரும் இம் மூன்றையும் பூதப்ரேத பைசாசம் என்று சேர்த்துக் கூறுவது மரபு.

மந்திரச் செய்தி :—மனனஞ் செய்வாரைக் காப்பது மந்திரம். மந்திர நிகண்டு, ருத்ர கற்பம், விஸ்வாமித்ராதி கற்பங்கள் முதலியன, மந்திர சாஸ்திரங்கள். மகத்தான இவைகளை முறையே ஜபித்தால், மந்திர தேவதைகள் காட்சியாகி சர்வ சித்திகளையும் தருவர். அதற்கு மாறான ஜபம் ஆயுளைக் கெடுக்கும். உச்சரிப்பில் ஓசை பழுதாகுமேல், வியாதி விளையும். தாழ்ந்த தேவதா மந்திரம், மரணத்தைத் தரும். தெய்வ நினைவின்றி உருவேற்றினால், நலம் சிறந்த பசுக்களும் செல்வமும் நாசமாகும். உடை உடுத்தாமல் உருவேற்றினால், புத்திர மித்திர சேதம். ஆதலின், மந்திரங்களைக் குருமுகமாகப் பெற்று, பக்தி சிரத்தையுடன் அநுட்டிக்க இஷ்டசித்திகள் உண்டாகும்.

அயில் வேல் என்பதில், அயில் - கூர்மை ; அதாவது ஞானக் கொழுமை ; வேல் எனும் ஞான.

சக்தி ஊதவுமேல், பூதப்ரேத பைசாங்களோ, சூன்ய மந்திர தந்திரங்களோ பாதிக்காது என்று படித்தபடி

"—சந்ததமும்

"பல்கோடி சன்மப் பகையும் அவமிருத்தும்
பல்கோடி விக்கினமும் பல்பிணியும்—பல்கோடி
பாதகமும் செய்வினையும் பாம்பும் பாசாசு மடல்
பூதமும்தீ நீரும் பொருபடையும்—தீதகலா
வெவ்விடமும் துட்ட மிருகமுத லாமெவையும்
எவ்விடம்வந் தெம்மை யெதிர்த்தாலும்—அவ்விடத்தில்
பச்சைமயில் வாகனமும் பன்னிரண்டு திண்தோளும்
அச்ச மகற்றும் அயில்வேலும்—வந்திடுக்கண்
எல்லாம் பொடிபடுத்தி எவ்வரமும் தந்துபுகுந்(து)
உல்லாசமாக உளத்திருந்து"

எனும் கந்தர்கலி வெண்பா இங்கு நினைவுகூரத்தகும்.

**ஓங்கிய சீற்ற மேகொண்(டு) உவணிவில் வேல்சூ லங்கள்**
**தாங்கிய தண்டம் எஃகம் தடிபர(சு) ஈட்டி ஆதி**
**பாங்குடை ஆயுதங்கள் பகைவர் என் மேலே ஓச்சின்**
**தீங்குசெய் யாமல் என்னைத் திருக்கைவேல் காக்க காக்க.**

(ப - ரை.) ஓங்கிய சீற்றமே கொண்டு - பெருஞ் சீற்றமே பெருகியவராய், உவணி - வாள்; வில்-, வேல்-, சூலங்கள்-, தாங்கிய - சுமந்து வந்த; தண்டம் - தண்டாயுதம்; எஃகம் - சக்கரம்; தடி—, பரசு - மழு; ஈட்டி ஆதி - ஈட்டி முதலிய; பாங்கு உடை ஆயுதங்கள் - (அழிக்கும்) தன்மை யுடைய ஆயுதங்களை; பகைவர் என்மேலே ஓச்சின் - விரோதிகள் என்மேல் விடுவார்களானால்; தீங்கு செய்யாமல் - (அவைகள்) தீமை விளைவியாதபடி; என்னை - அடியேனை; திருக்கைவேல் காக்க காக்க - (முருகன் தன்) திருக்கரத்திலிருக்கும் வேல் வந்து காப்பதாக, (எ-று.)

உள்ளம் கவர்ந்து எழுந்த அதன் மயமாயினர் என்பார், "ஓங்கிய சீற்றமே கொண்டு" என்றார். கடுஞ்சினம் கொண்டு சீறும் பாம்பு போல், பாய்ந்து வரும் கோபப் பண்பிற்குச் சீற்றம் என்று பெயர். அந்நிலையர் எழுந்து ஆயுதங்களை ஏவுவரெனில், அந்த ஓச்சுதலால் விபரீதமான தீங்குகள் விளையும்.

கரடு முரடான கையரின் கடுஞ்சீற்றத் தொடு வரும் கொடும் படைகள், அருளுடைய முருகன் திருக்கரத்தில் அமர்ந்திருக்கும் ஆண்மை வேலைக் கண்டு அடங்கும்; ஆதலின் தீமை விளையா என்று தெரிந்து விண்ணப்பித்த பா இது. (11)

**ஔவியம் உளர் ஊன்உண்போர் அசடர் பேய் அரக்கர்புல்லர்**
**தெவ்வர்கள் எவரா னாலும் திடமுடன் எனைமல் கட்டத்**
**தவ்வியே வருவா ராயின் சராசரம் எலாம் புரக்கும்**
**கவ்வுடைச் சூர சண்டன் கையயில் காக்க காக்க. 12**

(ப-ரை.) ஔவியம் உளர் - பொறாமை யுள்ள வர்கள்; ஊன் உண்போர் - புலால் புசிப்பவர்கள்; அசடர் - மூடக் கயவர்கள்; பேய் - பைசாசர்; அரக்கர் - ராட்சசர்; புல்லர் - அற்ப அறிவு அமைந்த வர்கள்; தெவ்வர்கள் - பகைமைக் குணம் படைத்த வர்கள்; எவரானாலும் - எவரேயாயினும்; திடமுடன் - உறுதியுடன்; எனை மல் கட்ட - மல்போர் புரிந்து என்னைக் கட்டிப் பிடிக்க; தவ்வியே வருவாராயின் - தாவிப் பாய்ந்து வருவாராயின்; சராசரம் எலாம் புரக்கும் - இவ்வுலகையும் காத்தருளும்; கவ்வுடை சூர சண்டன் - கவ்வுதல் உடைய சூரனுக்கு எமனைப் போன்ற எம்பிரான்; கை அயில் காக்க காக்க - திருக் கைவேல் (அவ்வமயம் வந்து) காத்தருள்வதாக, (எ-று.)

கல்வியோ செல்வமோ பிறவோ, வளர்ந்த முன்னைய தவத்தால் வருவன. உயர்ந்த அந் நிலையை உணராமல் பொருமையால் புழுங்கும் பலர், எதிர்ப்பைப் பிரமாதமாக எழுப்புவர்.

உணர்வில் தடிப்பேற்றும் ஊன் உணவு கொள்பவர், உருத்தெழு சூழ் நிலைகளும் உளவாகும்; "ஊன் உணவினர் தவமெனத் தேய்ந்தது துடியெனும் நுசுப்பே" எனும் கல்லாடம் கருதாமையே கயமை.

மூடத்தால் மூத்தோர், தம் நெறியைப் பின்பற்றவில்லை யென்று தாக்குதல் நோக்கில் தாராளம் காண்பார்.

நிற்க நேரமின்றி, உண்ண நேரமின்றி, உறங்க நேரமின்றி, நித்திய நலத்தை நினைக்க நேரமின்றி, தெய்வ நினைவின்றி, இரவில் பகலில் எங்கும் உலாவி, உருவத்தால் மனிதராய், உள்ளத்தால் அமைதியிலாப் பேயாகி எதிர்ப்பைப் பெரிதும் எழுப்புநரும் இருக்கின்றார்.

இரக்கம் அற்ற அரக்கர் இடிபுடை யெழுப்புவர். அற்ப குணத்தர் ஆரவாரமும் பல.

இன்னோர் என் வழிபாட்டு வாழ்க்கையில் தடை பல விளைவிக்கத் தாவி வருவாராயின், கவ்வி உயிர்களைக் கலங்க வைக்கும் கருமல சூரனைக் கண்டனம் செய்த கந்தப்பிரான் கைவேல், வந்து காப்பதாக என்பது கருத்து.

தாவி யென்பது எதுகை நோக்கித் "தவ்வி" என ஆயது.

சரம்—அசரம் - சராசரம்; சரம் - இயங்குதிணை; அசரம் - நிலைத்திணை; உயிர்களை எல்லாம் உவந்து

புரக்கும் அறக்கருணையான், கடுமை காட்டும் தீயவர் முன், தன் மறக் கருணையையும் சிறிது மலர்விப்ப தாக என்பது குறிப்பு.

சூர சண்டன் - சூரனைச் சண்டமாருதம் போல் வந்து மோதும் சண்முகன் எனினுமாம். அச்சத்தின் மிகுதியால், காக்க காக்க என்று அடுக்கி யுரைத்தார் என்க. (12)

**கடுவிடப் பாந்தள் சிங்கம் கரடி நாய் புலிமா யானை**
**கொடிய கோணாய் குரங்கு கோலமார்ச் சாலம் சம்பு**
**நடையுடை யெதனு லேனும் நான் இடர்ப் பட்டிடாமல்**
**சடுதியில் வடிவேல் காக்க சானவி முளைவேல் காக்க. 13**

(ப - ரை.) கடுவிடப் பாந்தள் - பயங்கர விட முடைய பாம்புகள்; சிங்கம்—, கரடி—, நாய்—, புலி—, மா - குதிரைகள்; யானை—, கொடிய கோள் நாய் - கொடுமையே கொண்ட ஓநாய்கள்; குரங்கு—, கோல மார்ச்சாலம் - பல நிறப் பூனைகள்; சம்பு - நரிகள் (முதலிய); நடையுடை எதனுலேனும் - இயங்கு திணைப் பிராணிகள் எதனுலாயினும்; நான் இடர்பட்டிடாமல் - அடியேன் துன்பம் அடையாத படி; வடிவேல் - சடுதியில் காக்க - விரைந்து வந்து காப்பதாக; சானவிமுளை வேல் காக்க - காங்கேயன் வேல் (வந்து) காப்பதாக, (எ-று).

கடுமை யெனும் அடை, ஆலத்தின் உக்ரத்தை அறிவிக்கின்றது. மேலும், கடுமையைச் சிங்கம் முதலியவற்றிற்கு அடையாக்கினும் ஆம். கொள் என்பது முதல் நீண்டுகோள் என்ருயது. மற்று, கோள் - வஞ்சகம் எனக் கொள்ளலுமாம். கோணாய்க்கு அடையான கொடுமையை, குரங்கு முதலியவற்றுடன் கூட்டலும் பொருந்தும். நடை-

சரம்; இயங்குதிணை. சானவி - சன்னு முனிவர் செவிவழி வெளியானவள் என்று பொருள் தரும் கங்கையின் பெயர். முளை - சேய். அரா முதலிய வற்றை யெண்ணிய அச்சமிகுதியால், "வடிவேல், முளைவேல் சடுதியில் காக்க காக்க" என்று இரு முறை அடுக்கினர்.

பாம்பு - சீறும்; சிங்கம் - அறையும்; கரடி - கட்டித் தழுவி கசக்கும்; புலி - பாயும்; யானை - தூக்கி யடித்து மிதிக்கும்; கோணாய் - உதிரத்தை உறிஞ்சும்; குரங்கு- சின்னபின்ன சேட்டை செய்யும். பூனை - பயங்கரமாகப் பீரிடும்; நரி - கண்ணில் மண்ணைத் தூவிக் காலைக் கடிக்கும்; இந்தப் பிராணி களால் நேரும் இடர்ப்பாடு எத்துணை!

அம்மான் வழிபாட்டில் இருக்கும் அடியேன், அநியாய இத்துன்பத்தை எதிர் நாளில் அடையாத படி, வடிவேல், சானவி முளைவேல் சடுதியில் காக்க காக்க என்றார். (13)

ஙகரமே போல்தழீஇ ஞானவேல் காக்க வன்புள்
சிகரிதேள் நண்டுக்காலி செய்யன் ஏறு ஆலப் பல்லி
நகமுடை ஓந்தி பூரான் நளிவண்டு புலியின் பூச்சி
உகமிசை இவையால் எற்கோர் ஊறிலா(து) ஐவேல் காக்க.

(ப-ரை.) ஞானவேல்—, ஙகரமே போல் தழீஇக் காக்க - ஙகர மெய் எழுத்தைப்போல் (இன மென என்னை) அணைத்துக் காப்பதாக; வன்புள் - (பரிவு இல்லாத) கொடிய பறவைகள்; சிகரி - எலி; தேள்—, நண்டுக்காலி - நண்டுத் தெறுக்கால்; செய்யன் ஏறு - வலிய செய்யான்; ஆலப் பல்லி - நச்சுப் பல்லி; நகமுடை ஓந்தி - நகத்தையுடைய ஓணன்; பூரான்—; நளிவண்டு - இளகிய உடல்

வண்டுகள்; புலியின் பூச்சி - சிலந்தி; உகம் திசை- (இவ்) உலகில்; இவையால் - இவைகளால்; எற்கு ஓர் ஊறு இலாது - அடியேனுக்கு ஒரு இடையூறும் விளையாதபடி; ஐவேல் காக்க - அற்புதவேல் அருள் தருவதாக, (எ-று.)

அங்ஙனம், இங்ஙனம், உங்ஙனம், எங்ஙனம் என வருவதன்றி, ஙகரவரிசையில் இருக்கும் ஙா ஙி ஙீ ஙு ஙூ ஙெ ஙே ஙை ஙொ ஙோ ஙௌ எனவரும் எழுத்துக்கள், மொழி யுலகில் சேர்ந்து வருவதில்லை. எனினும் ஙகரம், தன் இனத்தை அரிச்சுவடியில் என்றும் தழுவி யிருக்கின்றது. 'ஙப்போல் வளை' என ஔவையும் அருளினர். அதுபோல் பயனற்ற அடியேனையும் உறவெனக் கொண்டு, ஞானவேல் பாது காப்பதாக என்பது முதலடியில் போந்த பொருள்.

நோவுறுத்தும் நச்சு நோக்கால், ஆக்கையின் ஆவியால், நீடியநிழலால், படுகதி விளைவிக்கும் பாழும் பறவைகள் பல.

அவைகளுடன் எலி, சிலந்தி யாதியவற்றால் வேதனை என்றும் விளையாதபடி, 'ஐவேல் முன்வந்து அருள்பாலிப்பதாக' என்பது பின்னைய மூன்று அடிகளின் செய்தி.

இவைகளால் உடலுக்கோ, அன்றி உடலின் உறுப்புகட்கோ ஊனம் விளையின், வழிபாட்டிற்கு இழுக்கு வரும்; அங்ஙனம் ஆகாதபடி, தெய்வவேல் துணைபுரிவதாக என்பது குறிப்பு.

நண்டு போல் கவ்விக் கடிக்கும் கால்கள் உடைமையால் 'நண்டுக்காலி' எனப் பெற்றது. மேல். விழினும் விடத் தொடக்கு விளையுமாதலின், 'ஆலப்பல்லி' என்றார். நளிவண்டு - தீண்டிய அளவில் விடம் பாய்ச்சும் சீத மண்டலம் எனும் ஒருவகைப் பூச்சியைக் குறித்தது எனினுமாம். (14).

**சலத்தில் உய் வன்மீன் ஏறு தண்டுடைத் திருக்கை மற்றும்**
**நிலத்திலும் சலத்திலுந்தான் நெடுந்துயர் தரற்கே யுள்ள**
**குலத்தினுல் நான் வருத்தம் கொண்டிடா(து) அவ்வவ் வேளை**
**பலத்துடன் இருந்து காக்க பாவகி கூர்வேல் காக்க. 15**

(ப-ரை.) சலத்தில் உய் வன்மீன் ஏறு - நீருள் வாழும் ஆண்மையுள்ள முதலை; தண்டு உடை திருக்கை - (கூரிய) கொம்புடைய திருக்கை மீன்; மற்றும் - மற்றுமுள்ள சலராசிகளும்; நிலத்திலும்-, சலத்திலும்-, நெடும் துயர் தரற்கே உள்ள குலத்தினுல் - பெருந்துன்பம் விளைவித்தற்கே பிறந்துள்ள (இத்தகைய) ஜந்துக்களால்; நான் வருத்தம் கொண்டிடாது - நான் துன்பம் கொள்ளாதபடி; அவ்வவ்வேளை - (அபாயம் விளையும்) அவ்வக் காலங்களில்; பலத்துடன் இருந்து காக்க - உறுதி யுடன் இருந்து (வேல்) உதவுவதாக; பாவகி கூர் வேல் காக்க - அக்கினி கர்ப்ப முருகனுடைய கூரிய வேல் (தொடர்ந்து) காத்தருள்வதாக, (எ-று.)

நீரில் இருக்கும்பொழுது முதலைக்கு யானையினும் வலிமிகும். இறை வழிபாடு செய்ய நீராடும் காலத்தில், அநியாய முதலையின் அபாயம் ஒரு புறம்; கனத்து நீண்ட கொம்பால் குதித்துத் தாக்கும் பெரிய திருக்கை மீனின் சாகஸம் ஒரு புறம்; மற்றுமுள்ள நீர்வாழ் விஷ ஜீவராசிகளால் விளையும் தொல்லை ஒருபுறம்.

நீராடிக் கரையேறி நிலத்தில் நடக்கும்போது, எத்தனையோ விஷ ஆவி, விஷக்கல், விஷக் கிருமிகள் முதலியவற்றின் உபத்திரவங்கட்கு ஒரு வரம்புளதோ? இவைகளால் யான் வருந்துவதே தொழிலானுல் எடுத்த இப்பிறப்பில் முயன்ற தவத்தை முடிக்க முடியாதே! ஞானதேயன் ஞான

வேல், உரமுடன் அவ்வச் சமயத்தில் வந்து உதவி செய்ய வேண்டும் என்று பிரார்த்தித்தபடி.

இடையூறுகளை நினைந்து நெஞ்சம் இடிகின்ற தாகலின், பாவகி கூர்வேல் பலத்துடன் இருந்து காக்க காக்க என்று துடித்துப் படித்தபடி. பல மாவது - உக்ர உறுதி. பாவகி - உணர்வுக் கனலில் இருந்து உதயமானவன் எனும் பொருட்டு. (15)

**ஞமலியம் பரியன் கைவேல் நவக்கிர கக்கோள் காக்க**
**சுமவிழி நோய்கள் தந்த சூலை ஆக்ராண ரோகம்**
**திமிர்கழல் வாதம் சோகை சிரம் அடி கர்ண ரோகம்**
**எமையணு காமலேபன் னிருபுயன் சயவேல் காக்க. 16**

(ப - ரை.) அம் ஞமலி பரியன் கைவேல் - அழகிய மயில் வாகனனுடைய திருக்கைவேல்; நவக்கிரகக் கோள் காக்க - ஒன்பது கிரகங்களால் உண்டாகும் துன்பத்திலிருந்து காப்பதாக; சுமவிழி நோய்கள் - மலர் போன்ற கண்களிலிருந்து உண்டாகும் நோய்கள்; தந்த சூலை - பல் குத்து நோய்; ஆக்ராண ரோகம் - மூக்கு நோய்கள். திமிர் - திமிர் நோய். கழல் வாதம் - வாதக் கால் நோய்; சோகை-, சிரம் அடி கர்ண ரோகம் - தலைநோய் (சிரத்திற்கு) அடியில் உள்ள காதுநோய் (முதலியன); எமை அணுகாமலே - எம்மை நெருக்காதபடி; பன்னிரு புயன் - பன்னிரண்டு தோள் பரமனுடைய; சயவேல் காக்க - வெற்றிவேல் காப்பாற்றுவதாக, (எ-று.)

சிவனார் அம்சம் சூரியன்; உமாதேவியின் அம்சம் சந்திரன்; அறுமுகன் அம்சன் அங்காரகன்; திருமால் அம்சம் புதன்; பிரம்மாவின் அம்சம் குரு; இந்திரன் அம்சன் சுக்கிரன்; யமதருமன் அம்சம் சனி; காளியின் அம்சம் ராகு; சித்ரகுப்தர் அம்சம்

கேது என்று சோதிட நூற்கள் கூறுகின்றன. அத ஞற்ருன் அவைகள் அடியாரை அலட்டுவதில்லே. இந்நுட்பம் உணர்ந்தவராதலின்,

'ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி
சனி பாம் பிரண்டும் உடனே
ஆசறு நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியார் அவர்க்கு மிகவே'

என்று திருஞான சம்பந்தர் திருவாய் மலர்ந் தருளினுர்.

மற்றவர்களைத் திசாபுத்திகள், உச்ச நீச்சங்கள், நட்பு, ஆட்சி, பகை, பார்வை முதலியன விளைவித்து சுகம் துக்கம் ஆயுள் மரணம் ஆதியவற்றில் அகப் படுத்தி அல்லல் விளைவிக்கும் அக்கிரகங்கள் என்ப.

வேகம் படச் சுழன்று செயல் செய்ய எங்கும் கிரகங்கள் வியாபிக்கும்; தீய அச்சுழல்வில் அகப் பட்டு அடியேன் தீங்கடையாதபடி, விரைந்து வரும் மயில் இறைவன் கைவேல், முந்தி வந்து அருள்வ தாக என்பது முதலடியின் செய்தி.

சுமவிழி நோய்கள்—மலர்க்கண் மாதர் தொடர் பால் வரும் சூலே யென்ருரு முளர்; கடும் துறவியின் வாழ்க்கையில் இத்தகைய குற்றங்கள் இரா; மற்று, பத்தொன்பதாம்பாசுரத்தில் சூலே குறிக்கப்பட்டுளது. ஆதலின், சுமவிழி நோய்கள் என்பதற்கு, மலர் போலும் மிருதுவான கண்களில் உண்டாகும் பல வகை நோய்கள் என்று பொருள் கோடலே நேர்; சுமம் - மலர்; போல எனும் உவம உருபு தொக்கது. 'ஆதியாம் கயிலேச் செல்வன்' எனவரும் இரண் டாவது பாசுரத்தில், 'துரிசிலா விழியைக் காக்க' என்று கூறியுளர்; அங்குக் கொண்ட பொருள் வேறு; இது நோய்ச் செய்தியை நுவல்வதென்க. தந்த

சூலே - சூலக் குத்துபோல் பாதிக்கும் பல்வலி. ஆக்ராணம் - மூக்கு; வடசொல். கழலிவாதம் என்பதை வாதக் கழல் என மாற்றிப் பொருள் கொள்ளப் பெற்றது. சிரரோகம் - தலை சம்பந்த மான பல நோய்; புகை, வெய்யில், பனி, நித்திய போகம், அதி உறக்கம், நித்திரை பங்கம், நீரில் நனைதல், கீழ்க்காற்று, மிகு நீர் பருகல், ஓயாக் கவலை, வெப்பமான மலர்களை மோத்தல், அதிகம் பேசல் ஆதியவற்றால் முத்தோஷம் மிக்குவரும் ஒரு வகை நோய் இது. (16)

**டமருகத்(து) அடிபோல் நைக்கும் தலையிடி கண்டமாலை**
**குமுறு விப்புருதி குன்மம் குடல்வலி யீழை காசம்**
**நிமிரொணா(து) இருத்தும் வெட்டை நீர்ப்பிர மேகம் எல்லாம்**
**எமைஅடை யாமலே குன்று எறிந்தவன் கைவேல் காக்க.**

(ப - ரை.) டமருகத்து அடிபோல் நைக்கும் தலையிடி - உடுக்கை அடிபோல் துன்புறுத்தும் தலையிடி; கண்ட மாலை-, குமுறு விப்புருதி - குமுறி (ப்பெருத்த வலி விளைவிக்கும்) சிலந்திப்புண்; குன்மம்—, குடல்வலி — குடல் நோய் ; ஈழை - கபநோய்; காசம் - காசநோய்; நிமிரொணாது இருத் தும் வெட்டை - நிமிர முடியாதபடி படுக்கையாக்கும் வெப்ப நோய்; நீர்ப்பிர மேகம் எல்லாம் - நீர் கோத்த மேக வியாதிகள் (முதலிய) அனைத்தும்; எமை அடையாமலே - எம்மை அணுகாதபடி; குன்று எறிந்தவன் கைவேல் காக்க - கிரவுஞ்சமலை பிளந்த பெருமான் திருக்கை வேல் காத்தருள்வதாக, (எ று.)

தலையிடி - ஒற்றைத் தலைவலி யெனினுமாம்; கண்ட மாலை - வாத பித்த சிலேத்துமங்கள், மேதஸ் எனும் தாதுவை மேவும்; அதனால் பீழையான மாமிச தாது பெருகும்; அது கழுத்தின் நரம்புகளிலும்,

கண்களிலும், அரைகளிலும் கெட்டியாகி, நெல்லிக் காய், சிறு கத்தரிக்காய்ப் பிரமாணத்தில் மினு மினுத்துத் தோன்றும்; கட்டிகள் ஆக மாலை போல் கண்டத்தைச் சுற்றிவரும் நோய் இது; உடைந் தாலும் சில ஆறுதன; இதுவே அரையில் வந்தால் அரையாப்பு என்பர்.

குன்மம் - ஏப்பம், மலபந்தம், துர்ப்பலம், குடல் இரைச்சல், உப்பசம், வயிற்றுவலி, அஜீரணம், அசதி முதலியன அளிக்கும் இக்குன்ம நோய் பல வகை.

காசம் - அரோசகம், இருமல், கண்கள் மின்மினி பறப்பனபோல் ஆதல், முதுகு மார்பு விலா முதலிய இடங்களில் நோய் உண்டாதல், வெண்கலத் தொனிபோல் தொண்டையில் ஒலி, வாயில் கோழை முதலியன தோன்றி உபத்ரவிக்கும் இது, வாத காசம், பித்த காசம், சிலேத்தும காசம், ரத்த காசம், க்ஷய காசம் எனப் பலவகை.

குன்று எறிந்த செய்தி :—மாயையின் முக் குணங் கட்கு மூலம் அகங்காரம்; அந்த அகங்காரத்தில் இருந்து பிரதிபலித்த அண்டங்கள் பல. அந்த அண்டங்கட்கு அதிபதி ஆணவம்; அந்த ஆணவத் திற்கு உறவாகியுளது முக்குண விகற்ப அகங்கார கடினம். பிண்டத்திலிருந்து பேதுறுத்தும் அந்தக் கடினத்தை, அறுமுகப் பரமன் ஞான சக்தியால் அழித்தனன் என்பது சொருபச் செய்தி.

அந்த அகங்கார கடினம், அண்டத்தில் கிரவுஞ்சன் என்னும் பெயருடன் அசுர குலத்தில் பிறந்தது; சூரமன்மனிடம் உறவு பூண்டது; மலை வடிவு தாங்கி, மாய வித்தைகளால் முனிவர் தேவர் களை மயக்கியது; இரக்கம் இல்லாமல், என்றும் இம் மலையாகவே இரு என்று அகத்தியரால் சாபம்

பெற்றது; அந் நிலையிலும் எவர்க்கும் அவதி விளைவித்த அம்மலையை வேலால் அழித்தனன் விமலன் என்பது நடந்தச் செய்தி.

மாயா மலையைத் துகளாக்கிய இறைவன் வேல், கண்ணுக்குத் தெரியாமல் வந்து பாதிக்கும் கடிய கொடிய நோய்களிலிருந்து காப்பளிப்பதாக என்பது கருத்து. (17)

**இணக்கம் இல்லாத பித்த எரிவுமா சுரங்கள் கைகால்**
**முணக்கவே குறைக்கும் குட்டம் மூலவெண் முளைதீ மந்தம்**
**சணத்திலே கொல்லும் சன்னி சாலமென் றறையும் இந்தப்**
**பிணிக்குலம் எனையாளாமல் பெருஞ்சத்தி வடிவேல் காக்க.**

(ப - ரை.) இணக்கம் இல்லாத பித்த எரிவு - கட்டுப்பாடு இல்லாமல் பெருகும் பித்த எரிச்சல்; மா சுரங்கள் - பெரிய ஜுர உபாதைகள்; கை கால் முணக்கவே குறைக்கும் குட்டம் - கை கால்கள் முடங்கும்படிச் செய்கின்ற குஷ்ட ரோகம்; மூல வெண் முளை - வெண்ணிறமான மூல்முளை; தீமந்தம்- அஜீரணம்; சணத்திலே கொல்லும் சன்னி சாலம் என்று அறையும் - கணத்தில் மரணம் வருவிக்கும் சன்னிகளின் வகைகள் என்று (பயங்கரமாகச்) சொல்லப்பெறும்; இந்தப் பிணிக்குலம் - இந்த நோய்கள்; எனை ஆளாமல் - அடியேனை அடிமை கொண்டு ஆட்சி நடத்தாதபடி; பெரும் சத்தி வடிவேல் காக்க-, (எ-று.)

பிணித்தல் பற்றி, உடலில் வரும் நோய்கட்குப் பிணிகள் என்று பெயர். அடிமை கொண்டு இறைவன் ஆளவேண்டிய இந்த யாக்கையை, பிணிகள் அடிமைப்படுத்தி ஆட்சி செய்வது மரபல்லவே. இவைகள் என்னை பாதிக்காதபடி,

பேராற்றலுடைய வடிவேல் என்னைப் பேணுவதாக என்றபடி.

கர்மத்தால் நோய்கள் வரும்; காரணத்தாலும் வருவ சில; அகால உணவு, அமித போகம், அவைதிக ஒழுக்கம், ஆதியவற்ருல் வருவனவற்றை, காரணம் பற்றிய நோய்கள் என்பர். வாகட நூற்களில், இவைகளைத் தவிர்க்க வகையான உயர்ந்த மருந்து முறைகள் பல உள.

கர்மத்தால் வரும் பிணிகளைத் தவிர்க்க எவரா லும் ஆவதில்லை; வந்தெனை அவைகள் வருத்தா வண்ணம், வேல் வந்து வாழ்விப்பதாக என்பது கருத்து. பிணிக்கும் பிணிக் கூட்டத்தை ஒழிக்கும் அப்பெரும் சத்தி, வடிவேலுக்குத்தான் உண்டென் பதை சொற் போக்காலும் தொனிப்பொருளாலும் தோன்றக் கூறினர். (18)

**தவனமா ரோகம் வாதம் சயித்தியம் அரோசகம் மெய்**
**சுவறவே செய்யும் மூலச்சூ(டு) இளைப்(பு) உடற்று விக்கல்**
**அவதிசெய் பேதி சீழ்நோய் அண்டவா தங்கள் சூலை**
**எவையும் என் இடத்தெய் தாமல்எம்பிரான் திணிவேல்காக்க.**

(ப - ரை.) தவன மா ரோகம் - நாவரட்சி மிக்க நோய்; வாதம் - வாதநோய்; சயித்தியம் - சீதளம்; அரோசகம் - பசியின்மை, மெய் சுவறவே செய்யும் மூலச்சூடு - உடலை வற்றலாக்கும் மூலச்சூடு இளைப்பு, உடற்று விக்கல் - வருத்து கின்ற விக்கல்; அவதிசெய் பேதி - துன்புறுத் தும் பேதி; சீழ் நோய் - சீழ் பிறப்பிக்கும் நோய்; அண்ட வாதங்கள் - வாதத்தால் வரும் பீஜ நோய்கள்; சூலை எவையும் - சூலை முதலிய எவ் வகை நோய்களும்; என் இடத்து எய்தாமல் - என்

உடலில் நேராதபடி; எம்பிரான் திணிவேல் காக்க — எம் உள்ளம் அகலாத எம்மான் திட்ப வேல் காப்பாற்றுவதாக, (எ-று.)

தவனம்—எவ்வளவு நீர் பருகினாலும், அடங்காத நாவரட்சியைத் தரும் நோய்.

சூலை—முறிச்சூலை, நிதம்பச் சூலை, பக்கச் சூலை, கர்ப்பச் சூலை, வாயுச் சூலை, வாதநீர்ச் சூலை, சுக்ல ப்ர்மேக சூலை, எலும்புச் சூலை, மூல பாண்டுச் சூலை, வாதபாண்டுச் சூலை முதலிய பலவகை யென்பர்.

**நமைப்புறு கிரந்தி வீக்கம் நணுகிடு பாண்டு சோபம்**
**அமர்த்திடு கருமை வெண்மை ஆகுபல் தொழுநோய் கக்கல்**
**இமைக்குமுன் உறு வலிப்போ(டு) எழுபுடைப் பகந்த ராதி**
**இமைப்பொழு தேனும் என்னை எய்தாமல் அருள்வேல் காக்க.**

(ப - ரை.) நமைப்பு உறு கிரந்தி - நமைச்சல் உண்டாக்கும் கிரந்தி நோய்; வீக்கம் நணுகிடு பாண்டு - (உடலில்) வீக்கம் விளைவிக்கும் பாண்டு ரோகம்; சோபம் அமர்த்திடும் - சோர்வை விளைவிக்கும்; கருமை வெண்மை ஆகு பல் தொழுநோய் - கருமை வெண்மை நிறமாக உண்டாகும் பல விதமான குஷ்டங்கள்; கக்கல் - வாந்தி; இமைக்கு முன் உறு வலிப்போடு-இமைப்பதற்கு முன் உண்டாகும் இழுப்பு நோயுடன் ; எழு புடை பகந்தர ஆதி - விம்மிக் குத்தி (வலியுண்டாகும்) பவுத்திரம் முதலான நோய்கள், இமைப் பொழுதேனும் என்னை எய்தாமல் - இமைப்பொழுது கூட என்னை வந்து பாதிக்காதபடி ; அருள்வேல் காக்க - கருணையுடைய வேல் (வந்து) காப்பாற்றுவதாக. (எ - று).

பதினெட்டாம் பாசுரத்தில் சொன்ன குட்டம் வேறு; இங்கு உரைத்தது வேறு என உணர்க.

சோமகாந்தன், தக்கன், உருக்குமாங்கதன் முதலி னோர், முனிவர்கள் அருளியபடி இறைவனை வழி பட்டுத் தொழு நோய் தவிர்ந்த வரலாறுகளை விநாயக புராணம் விரித்து உரைக்கின்றது. அது கொண்டு, திருவருள் துணையால் தான் இந் நோய் தீரும் என்றறியப் பெறும்.

இயற்கையாகக் கண்களை யிமைக்கும் கால அளவு, இமை யெனப் பெற்றது. அவ்வளவு சிறிய கால அளவு பாதித்தாலும், என் சிந்தனை அந் நோயின்பால் சேரும்; அங்ஙனம் நேருமேல், அந் நேரம்வரை நின்பால் சிந்தனை நீங்கிவிடும். அவ்வண் ணம் ஆகாதபடி, அருளே உருவான வேல், கடைக் கணித்து என்னைக் காப்பதாக என்பது கருத்து. (20)

**பல்லது கடித்து மீசை படபடென் றேதுடிக்கக்**
**கல்லினும் வலிய நெஞ்சம் காட்டியே உருட்டி நோக்கி**
**எல்லினும் கரியமேனி எமபடர் வரினும் என்னை**
**ஒல்லையில் தாரகாரி ஓம் ஐம் ரீம் வேல் காக்க. 21**

(ப - ரை.) பல்லது கடித்து - (பெருங் கோப அடையாளமாகப்) பற்களை (நற நற என்று) கடித்து; மீசை பட பட என்றே துடிக்க–, கல்லினும் வலிய நெஞ்சம் காட்டியே - கல்லினும் இறுகிய மனத்தைக் காட்டி; உருட்டி நோக்கி-கண்களை உருட்டி விழித்து; எல்லினும் கரியமேனி எமபடர் வரினும்–, இருளைவிட கருத்த மேனியரான எமதூதர்கள் வந்தாலும், தார காரி - தாருகாசுரனை அழித்த தற்பரனுடைய, ஓம் ஐம் ரீம் வேல்–, ஒல்லையில் என்னைக் காக்க - அதி விரைவில் வந்து அடியேனைக் காப்பதாக, (எ - று).

முன்செய் வினை யிங்ஙனே வந்து மூண்டது. பிராரத்துவ வினையின் பயனை அனுபவித்து, அருந்

தவம் செய்து பேறுபெற வந்த உடல் இந்த உடல். இந்தநிலை போதும். இனியும் வினை விளைவு வேண்டா. வாக்கு மனம் காயத்தை, இறைவனிடமே வாழவைப்பம் எனத் துணிந்து செயலாற்றி உய்யவேண்டும் இந்த உயிர்.

அங்ஙனம் இன்றி, உலகம் நித்யம், என்றும் இருக்கும் இந்த உடல் என்று நம்பி, சுகபோக உறிவில் சொக்கிப் பல்லிளிக்கும் பாவத்தால், நரை திரை மூப்பு நண்ணுகின்றது. அறக்கடவுள், இனியிவன் பூமிக்குப் பாரம் என்று எண்ணுகின்றது.

கட்டளைப்படி வருகின்றார் காலதூதர்கள். சுவாசத்தைச் சூக்கும பாசத்தால் கட்டி யீர்த்து, கொண்டு போன ஆன்மாவை. அவதி நரகம் பலவற்றை அனுபவிக்கச் செய்கின்றார்.

அதன்பின் பிரமன், வினையளவிற்குத் தக்கபடி, மீட்டும் பிறப்பில் கூட்டுவன். பட்டதை மறந்து, மட்டரகமான மதியால், பழைய வாசனையிலேயே ஆன்ம உணர்வு படரும். மீட்டும் தூதர்; அதன் பின் பிரமன் படைப்பு; இங்ஙனே தொடர்கின்றது இறப்பும் பிறப்பும்.

"கலக யமன்விடு தூதர் பிடித்திரு கைகள் சலித்தனரால்
கருவள ரச்சும வாபெரு நோயால் கருத்தனை நொந்தனரால்
அலகறு தந்தையர் பெற்றுவளர்த்தழி யாத்துயர்
[கொண்டனரால்
அரிவையர்பூண்மங் கலநாண் இழவால் அழுது சலித்தனரால்
பலமுறை நரகு புகுந்தடை துயரயல் பார்த்து வெறுத்தனரால்
பந்து ஜனங்கள் சிநேகர் சிசுக்கள் பதைத்து நடுங்கினரால்
உலகம்உதித்திடு நாள்முதல் உடலை ஒழிந்து பொறுத்திடலால்
ஓகெடு வாய்பல பேர்கள் நடுங்க உருக்கொளல் என்னழகே"

என்றபடி ஆகின்றது, இறப்பால் பிறப்பால் வருகின்ற இழிவு. இங்ஙனம் பலர் சலிக்க, வந்து பிறந்திறந்து ஊசலாடுகிறது உயிர்.

எத்தனை தரம் இவர்களைப் பற்றுவது? இது என்ன தொல்லை! என்று, ஆத்திரம் தூதர்கட்கு அதிகரிக்கின்றது. பெருஞ்சினம் பெருகுகின்றது.

பல் கடித்துப் படபடக்கின்றது மீசை. இரக்கமேயில்லாமல், மாபெருங் கல்லாக இறுகிவிடுகின்றது மனம். உரிய தம் கண்களை உருட்டி விழிக்கின்றனர். கோபக் கொதிப்பேறிக் கன்னங் கறேலென்று கறுத்து விடுகின்றது தேகம். அலமருகின்றது அறிவு. பற்றுவ்து யாரை யென்ற சிந்தனையும் பறந்து விடுகின்றது. ஆயுள் முடிந்ததா! அது போதும் என்று, பாழும் ஆத்திரத்தோடு வந்து ஆன்மாவைப் பற்றுவர்.

அறிவு தொடங்கிய நாள் முதல், அமலனையே யான் ஆராதித்தேன்! அறிந்தாரேல் இதனை, அடியேன் முன் தூதர் அணுகார். பகுத்துப் பாராதே என்னைப் பற்ற வருவராயின், யான் செய்வது யாது?

பயிலும் தவ முனிவர்க்கு, அன்று எமனு யிருந்த பாவ தாரகன் உயிரைப் பருகி, உலகிற்கு விடுதலையளித்தது ஓம் ஐம் ரீம் வேல்.

அந்த சித்பர அற்புத தெய்வத் திருவேல், யமபடர் தரிசன அபாய சூழ்நிலையில், என் முன் வந்து இடர் தவிர்ப்பதாக என்று வேண்டியபடி.

கருமை மின்னும் உடலினர் என்புழி, "எல்லினும் கரிய மேனி" என்றார். படர் - தூதர்; வடசொல். வரினும் என்ற இடத்து உம்மை, பெரிதும் என்னிடம் வாரார் என்னும் எதிர்மறைப் பொருளைப் பயந்தது. தாரக ஹரி - தாரகாரி; வடசொல்.

ஓம் - காப்பு. ஐம் - தலைமை; ரீம் - உக்ரம்; இம்மூன்றுமாக வந்து உதவுவது வேல், எனவும், மற்று, ஓம் - பரமாத்ம ரூபம். ஐம் - வாக்கு ரூபம்; ரீம் - நிலரூபம் எனவுமாம்; அருமையான இம் மூன்றுமான வேல் எனவரும் அநுபவப் பொருள் நுட்பத்தை, உயர்ந்த குரு முகங்கொண்டு உணர்க.

**மண்ணிலும் மரத்தின் மீதும் மலையிலும் நெருப்பின் மீதும்**
**தண்ணிறை ஜலத்தின் மீதும் சாரி செய் யூர்தி மீதும்**
**விண்ணிலும் பிலத்தின் உள்ளும் வேறெந்த இடத்தும் என்னை**
**நண்ணி வந்(து) அருளார் சஷ்டி நாதன் வேல் காக்க காக்க.**

(ப - ரை) மண்ணிலும்—, மரத்தின் மீதும்—, மலையிலும்—, நெருப்பின் மீதும்—, தண் நிறை ஜலத்தின் மீதும் - குளிர்ச்சி நிறைந்த நீரிலும்; சாரி செய் ஊர்தி மீதும் - ஏறிச் செலுத்தும் ஊர்திகளிலும்; விண்ணிலும் - ஆகாயத்திலும்; பிலத்தின் உள்ளும் - பாதலம் நோக்கிய குகைகளிலும்; வேறு எந்த இடத்தும் - இன்னும் வேறு எந்த இடங்களிலும்; என்னை நண்ணி வந்து - அண்மையில் வந்து அடியேனை; அருள் ஆர் சஷ்டி நாதன் வேல் காக்க காக்க - கருணை நிறைந்த சஷ்டி நாதன் கைவேல் என்றும் காத்தருள்வதாக, (எ - று.)

நம்பன் வழிபாட்டுச் சிந்தனையில் நடந்து செல்லும்போது, இரவிலும் பகலிலும் காலில் நச்சுக் கல் பொத்தாமல், மேடு பள்ளங்களில் தடுக்கி வீழாமல், வைகறையில் மலர் பறிக்கும் காலங்களில், வண்டு முதலிய பூச்சுக் கடிகள் வாராமல் பழவர்க்கம் ஏறிப் பறிக்கும் காலங்களில் மரக்கிளைகள் முறியாமல், பனியால் பழுது விளையாமல், மலையேறிச் சறுக்கி விடாமல், வேள்வி, தீபாராதனை, விளக்கேற்றல் முதலிய அமயங்களில் தீயால் துன்பம் நிகழாமல்,

நீராடும்போது அதிக குளிர்ச்சி, ஆழம் ஆதியவற்ருல் அபாயம் ஆகாமல், பாழும் துட்ட தேவதைகளின் பார்வை முதலியவற்ருல் விண்ணிலிருந்து விபத்து விளையாமல், குகைகளுள் புகும் நேரத்தில் விட ஜெந்துக்கள், விஷ ஆவி, இருள் கவ்வித் திசை மாறல் ஆதிய திடுக்கிடும் நிலை நேராமல், நாடு, காடு, நகர், ஆறு, குளம், கிணறு முதலிய எந்த இடங்களிலும் இறைவனையே எண்ணி ஆராதிக்கும் அடியேனை, அருள் நிறைந்த நாதன் வேல் அணுகி வந்து அருள் பாலிப்பதாக என்றபடி.

சஷ்டி என்பது, திங்கள் தோறும் நேரும் வளர் பிறை தேய்பிறைகளின் ஆரும் நாட்கு அமைந்த பெயர். எனினும், வளர்பிறை சஷ்டிக்கு ஆக்கம் அதிகம்; அதனினும் ஐப்பசி வளர்பிறை சஷ்டிக்கே அதிக பெருமை. இந்த நாட்களில், குகப் பரம குமரனை ஆராதிப்பவர்தம் அசுர உணர்வு அழியும். ஓங்கார தெய்வத்தின் ஒளி, உணர்வில் உதயமாம். அக்காலங்களில் அன்புமிக்கு, வைகறையில் நீராடி, அநுஷ்டித்து, விரதம் மேற்கொண்டு, வரத முருகப் பெருமானை வழிபடுகின்ருர் மேலோர்கள்.

அந்த ஆறுநாளும், சூராதியரை யடர்த்த நாள்கள்; அதுவே பிண்டத்தில் மல கண்டனம் செய்யும் காலம். அக்காலங்களில், கந்தப்பிரான் தரிசனம் எங்கும் கம்பீரமாகக் காணப் பெறும். ஆதலின், "சஷ்டி நாதன்" என்ருர். நிறையருள் வடிவன் ஆதலின், 'அருளார்' என அடைகொடுத்து ஓதினுர். ஐம்பூதங்கட்கும், வேதங்கட்கும், பிற எவர்க்கும் உயிர்ப்பா யிருந்து உதவுவோ ளுதலின், "நாதன்" என்ருர். அருளார் நாதன் வேலும் அருளுடைய தாகலின், அருளை வேலுக்கு அடை யாக்கலுமாம்.

வழிபாட்டுக் காலங்களில், மண்ணில், மரத்தில், மலையில், நெருப்பில், நீரில், ஊர்தியில், விண்ணில், பிலத்தில், பிற இடங்களில் தொடர்பு பிறக்கும். விளம்பிய அந்த இடங்களில் இடையூறு விளையின், அறுமுகத்தை வழிபடத் தடையுளதாகும். அங்ஙனம் ஆகாதபடி, வேலின் காப்பு வேண்டும் என்றார்.

**யகரமே போல் சூலேந்து நறும்புயன் வேல் முன் காக்க**
**அகரமே முதலாம் ஈராறு அம்பகன் வேல் பின் காக்க**
**சகரமோ(டு) ஆறும் ஆனோன் தன்கை வேல் நடுவில் காக்க**
**சிகரமின் தேவ மோலி திகழ் ஐ வேல் கீழ் மேல் காக்க. 23**

(ப - ரை.) யகரமே போல் சூல் ஏந்தும் - ய எனும் எழுத்தைப் போன்ற வடிவுடைய முத்தலைச் சூலத்தை ஏந்திய; நறும் புயன் வேல் முன் காக்க - மணம் கமழ் திருத் தோள்களையுடைய (முருகன்) திருக்கை வேல் (என்) முன்பக்கத்தில் காப்பதாக; அகரமே முதலாம் ஈராறு அம்பகன் வேல் பின் காக்க -'அ எனும் எழுத்தை முதலாகக் கொண்ட பன்னிரு கண் பரமன் வேல் (என்) பின் புறத்திலிருந்து காப்பதாக; சகர மோடு ஆறும் ஆனோன் தன் கை வேல் - ச எனும் எழுத்துடன் சேர்ந்த ஆறு எழுத்தையும் (தன்) பெயராகக் கொண்ட பெருமானுடைய திருக்கரத்து வேல்; நடுவில் காக்க- (என்) இடையிலிருந்து காப்பதாக; சிகரமின் தேவ மோலி - சிகரம் போல் விளங்குகின்ற தெய்வ மகுடம் தரித்த பிரானுடைய; திகழ் ஐ வேல் கீழ் மேல் காக்க - விளங்கும் முதன்மை வேல் (என்னைக்) கீழும் மேலும் காப்பதாக, (எ-று).

'யகரமே போல் சூல்' எனும் இந்த உவமை, தமிழ் மரபில் புது நடை. இப்படியே 'லகரமே போல் காளிங்கன் நல்லுடல்' எனும் 25-ஆம் பாட்டின்

உவமையும் உணர்ந்து இன்புறத் தக்கது. சூல் - சூலம் என்பதன் பகுதி மாத்திரமாய் நின்றது; இது, முருகனது பன்னிரு படைகளுள் ஒன்று. முருகன் 'மணம்கமழ் தெய்வத்து இளநலம்' காட்டுவோனாதலின், 'நறும் புயன்', என்றார். இப்பெயர் முருகன் என்பதன் பொருளையும், அனைத்தும் அருளும் அருள் மணத்தன் எனலையும் அறிவிக்கின்றது. மணம் கமழ் கடம்பு வெட்சி யாதிய மலர்களை அணிந்த இயற்கைக் கடவுள் என்பதும் ஒருவகை.

அகரம் முதல் ஔ வரை யுள்ள உயிரெழுத்துப் பன்னிரண்டும், திருமுகத்தில் அமைந்த பன்னிரண்டு கண்களாகவுடைய பரமன் அவன் என்பதால், தண்ணளிமிக்க தமிழ், கந்தப்பரமன் கண்கள் எனல் நம் கருத்தைக் கனிவிக்கின்றது. "பன்னிரண்டு கண்ணுடைய பிள்ளை தோன்றும்" எனும் தமிழ் மறை இங்கு எண்ணத்தகும்.

பன்னீருயிரும், பதினெட்டு மெய்கள் மேல் ஏறி அவைகளை இயங்கச் செய்வது போல், பரமன் அருட் கண்கள் பன்னிரண்டும், இனிய தன் மெய்களெனக் கொண்ட எவ்வுயிர்மேலும் ஏறி, என்னைக்காண்; பிறகு உன்னைக்காண்! என்று உணர்த்தி, அவைகளை உயிர்க்கச் செய்கின்றன என உணர்க.

ஆறெழுத்தாகிய ஷடக்ஷரம் பிரயோகிக்கப் பட்டிருத்தலைக் கண்ணுறுவார், திருமுருகாற்றுப் படை யுரையில், ஆறெழுத்து மந்திரம், "நமக்குமாராய" என நச்சினார்க்கினியர் வரைந்தது தானோ என்று மயங்குவரோ? சிலர் "ஷடஷரம்" என எழுத அறியாது, "ஷடாக்ஷரம்" என எழுதுகின்றனர்; அவர்க்கு யாது கூறலாம்?

ஆறிரு தடந்தோ ளண்ணல் ஆறெழுத் தினையு மோதில்
வேறொரு பிணிபோ மென்கை வியப்பதோ பிறவியென்னும்
மாறரும் அநாதி நோயும் மாறி வேதாக மங்கள்
கூறரும் இன்ப வீட்டில் குடிபுகுந் திருப்ப ரன்றே

என்னும் சிவப்பிரகாச சுவாமிகள் அருளிய சீகாளத்தி புராண நக்கீரச் சருக்கம், ஆறெழுத்தின் அருமையை அறிவிக்கின்றது.

சரவணபவ என்பது, ஸ்ரீ வல்லி தேவசேனைத் தேவியர் மேற்கொண்ட சடக்கரம; தாயர் மேற்கொண்ட ஆறெழுத்தையே, சேய்கள் கொள்வது நலம் என்று, பெரும்பான்மையர் இன்றும் இதனையே கொண்டுளர்.

"ஏமருள் சவ்வும் ரவ்வும் வவ்வும் எங்கோமான்
மாமலி ணவ்வும் பவ்வும் வவ்வும் எங்கோமான்
ஓமொடு ரீயும் ஐயுங் க்லீயும் எம்கோமான்
ஆமயம் வெல்லும் ஔவும் சௌவும் எம்கோமான்"

எனவரும் திருவலங்கற்றிரட்டு இங்கு எண்ணத் தகும்.

"சகர முதல் ஆறும் மாசில் பதி; யகர மாவ(து) ஆவி;
சிரத நம பாசமாம்; எலாம்
நிகழு மொழி மேல் நில்ாவு பொருள் சரவ ணேசனை
நிருமல நமா வெ னுகுமே;
பகரிவை யொ(டு) ஓமும் ஏறில் நெடியதசமாம்; விசேட
பலனுற அவாவும்ஜெழுளோர்,
புகழும் ஏதை யேனும், வீர உறுதியொடு கோடியே செய்
புனித முறின் வீடும் ஆள்வரே"

என்று பிறிதோரிடத்தில், பாடியுளர் பாம்பன் அடிகள். இதன்படி, ஓம் எழுத்தான முதலெழுத்தை முன் வைத்து, ஆறெழுத்தை அதன் பின் வைத்து,

ஆன்மாவான யகரத்தை அதன் பின் நிறுத்தி, பாசப் படலமான நம என்பதை இறுதியில் இருத்தி, சடக்கர தசக்கரமாக அநுட்டிப்பர் மேலோர்.

உச்சியில் பளபள என்று முருகன் மகுடம் என்றும் மிளிர்வதாகலின், "சிக்ரமின் தேவ மோலி" என்றார். வானவர் கந்தகிரியில் சூட்டி வணக்கம் செய்யப் பெற்ற தாகலின், அது, 'தேவமோலி' எனப் பெற்றது; தேவர்க்கு மகுடம் போன்றவன் எனினுமாம்.

"முடிசார்ந்த மன்னரும் மற்றுமுள்ளோரும் முடிவிலொரு
பிடி சாம்பராய் வெந்து மண்ணாவர்"

என்று பட்டினத்தடிகளும்,

"செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள் மணவாள!
செங்கீரை யாடி யருளே"

என்று பிள்ளைத் தமிழும்,

"பிறந்திறக்கும் தெய்வப் பிணங்களைக் கொண்டாடி
அறந்தழைக்கும் சோணகிரி யாரே—பிறந்திரவா
உம்மைப் புகழ்ந்தே உமக்கடிமை யானபேர்
தம்மைப் புகழ்வ தல்லல் தான்"

என அருணகிரியந்தாதியும் விளம்பலின், மோலியும் வேலும் முருகற்கே உடைமை; புறப் பொருள் நூற்கள் அவ்வகைளப் பிறர் மேல் ஏற்றுதல் உபசாரம் என்க.

**ரஞ்சித மொழிதே வானை நாயகன் வள்ளி பங்கன்**
**செஞ்சய வேல்கிழக்கில் திறமுடன் காக்க அங்கி**
**விஞ்சிடு திசையின் ஞான வீரன் வேல் காக்க தெற்கில்**
**எஞ்சிடாக் கதிர்கா மத்தோன் இகலுடைக்கரவேல் காக்க.**

(ப - ரை) ரஞ்சித மொழி தேவானை நாயகன் - இனிய மொழி பகரும் தேவயானையார் மணவாளன் ; வள்ளி பங்கன் - வள்ளியம்மையார் பங்கில் இருப்பவன் ; செம் சயவேல் - செம்மையை யுடைய வெற்றிவேல் ; கிழக்கில் திறமுடன் காக்க - கீழ்த் திசையில் ஆற்றலுடன் இருந்து அருள்வதாக ; அங்கி விஞ்சிடு திசையின் - அக்கினியின் ஆட்சி மிக்க தென்கிழக்குத் திசையில் ; ஞான வீரன் வேல் காக்க - ஞான வீரனுடைய வேல் காப்பதாக ; எஞ்சிடாக் ; கதிர்காமத்தோன் - பின் வாங்காத கதிர்காமக் கடவுளின், இகல் உடை கரவேல் - பகையை அழிக்கும் திருக்கை வேல் ; தெற்கில் காக்க - தெற்குத் திசையில் நின்று (என்னைக்) காப்பாற்றுவதாக, (எ - று.)

பேசும் மோனப் பெருந்தேவி வள்ளியம்மை; பேசா மோனப் பேரன்னை தேவயானையார்; பேசாதார் பேசினால் ரஞ்சிதமா யிருக்கு மாதலின், "ரஞ்சித மொழி" என்றார். இடது பக்கத்திலிருக்கும் மோன யானையை நாளும் ஆளும் முதல்வன் ஆதலின், "நாயகன்" என்றார்.

'அடியாரை ஆளத் தூண்டிக் கொண்டே யிருக்கும் ஊக்கயராதலின், வலத்திலிருக்கும் தேவியார், வள்ளியார் என்னு நாமம் வாய்த்துளர். அவர் இட்ட பணியிற் பங்கு கொள்பவ னாதலின், 'வள்ளி பங்கன்' என்றார். பாங்கன் என்பது முதற் குறைந்து பங்கன் என ஆயது எனினுமாம்; அப்பொருளில் பாங்கன் - தோழன் என்க. அகம் போல் முகம் என்பர்; 'வ்ள்ளி யிதயாம்புயம் அன்ன வதனம்புய' என்ற கந்தரந்தாதியிற் கண்டபடி, வள்ளியார் தூய நினைவைப் புலனுக்கும் திருமுகத்தான் முருகன் எனு மதனாலும், 'வள்ளி பங்கன்' எனும் தொடர், ஓதுவார் உள்ளத்தை நெகிழ்விக்கும் திண்ணம்.

விசித்தக வெற்றியில் விளங்குவ தாகலின், 'செம் சயவேல்' என்றார். தெய்வத்தைச் சதா நினைவார்க்குத் திசை வேற்றுமை தோன்ரு. யாத்திரையாளர்க்குச் சில சமயம், புரியாமையால், திசைமாற்றம் விளைவதுண்டு. அந்நிலையில் கீழ்த்திசை நோக்கி வழிபாடு செய்ய நேரும்; அதன் பயனாக, சிவபோகத்திற்கு அயலான போக அநுபவம் போட்டியிடும்.

என் சித்தம் அந் நிலையில் சிதையாதபடி, தேவியர் பெருமான் வெற்றிவேல், 'கிழக்கில் திறமுடன் காக்க' என்ருர்.

நாற்பூத நடுவதான அக்கினியின் ஆட்சி, என் மேல் அதிகம் பாய்ந்து அவதி விளையாதபடி, ஞானக்கினி வீரன் ஞான வேல், தென்கீழ்த் திசையினின்று புரந்தருள்வதாக என்ருர்.

கதிர் - ஒளி; காமம் - வேட்கை; அருள் ஒளியில் காதல் அளவிறந்தெழச் செய்யும் சொருப க்ஷேத்ரம் கதிர்காமம்.

> 'சொருபந்தனை யுணரார் ஒளி திவளும் திருவுருவை
> வருபந்தனை செயினும் மதி மணவா அருள் உவா
> கருபந்தனை கழல்வித்திடு கதிர் காமம தடைதி'

என்று கல்யாண முனிவர்க்கு அகத்தியர் அருளிய வரலாறு இங்கு எண்ணத் தகுவது. இத்தலம் தென் திசையில் உளது; கனிவுடன் தவம் செய்வார்க்கு இடம் கதிர்காமம்; அதனால் சொருப நாட்டம் சித்திக்கும், இதை நினையாமல், கோபுரமில்லை; விக்ரகமில்லை; பதினாயிரக்கால் மண்டபம் இங்கு இல்லை யென்று இப்படி யெல்லாம் அத்தலம் குறித்துப் பறைதலின் யாதும் பயனில்லை.

அதே தென் திசையில் யமபட்டணம் உளது; மயங்கி உலக மயமானோர் தங்கி, யிடிபுடைபடும் நரக

இடம் அது. என்னை அத்திசையர் பறிறவரும் அமயம், பகையை யழிக்கும் தென்திசைக் கதிர் காமத்தான் திருவேல் வந்து பாதுகாப்பதாக என்பது இறுதியடியின் செய்தி. (24)

**லகரமேபோல் காளிங்கன் நல்லுடல் நெளிய நின்று**
**தகர மர்த்தனமே செய்த சங்கரி மருகன் கைவேல்**
**நிகழெனை நிருதி திக்கில் நிலைபெறக் காக்க மேற்கில்**
**இகல்அயில் காக்க வாயுவினில் குகன் கதிர்வேல் காக்க. 25**

(ப • ரை.) லகரமே போல் - ல என்னும் எழுத்தின் உருவம் போல் (வளைந்து ஆர்பரித்த); காளிங்கன் நல் உடல் நெளிய நின்று - காளிங்கன் (என்னும் இராட்சசப் பாம்பின்) கரிய பெரிய உடல் நெளியும்படி (அதன் மேல் ஏறி நின்று); தகர மர்த்தனமே செய்த - (நடனமாடிச்) சிதையக் கடைந்து (அதன் உடலைக்) குலைந்த; சங்கரி மருகன் கைவேல் - (பாஞ்சசன்ய மென்னும்) சங்கையேந்திய திருமால் மருகன் திருக்கைவேல்; நிகழ் எனை - (வழிபாடு) நிகழ்த்திக் கொண்டிருக்கும் அடியேனை; நிருதி திக்கில் - தென் மேற்குத் திசையில் (என்னைப்) புரப்பதாக; குகன் கதிர்வேல் - குகப் பெருமான் (ஏந்திய) பேரொளிப் பிழம்பான ஞானவேல்; வாயுவினில் காக்க - வடமேற்குத் திசையில் (இடையூறு பிறவாதபடி) வாழ்வளிப்பதாக; (எ-று.)

உடல் கோணியவாறு, உள்ளமும் கோணையான கொடியோன் காளிங்கன், யமனைப் போல யமுனை நதியிலிருந்து, நச்சுக் கனலை யெழுப்பி, சூழ்நிலையிலிருந்த ஆயர்வனம் அனைத்தையும் அழித்தான். அவனால் அனைவரும் அஞ்சி யிருந்தனர். அவன் கொட்டம் அடக்க எண்ணிய கோபாலன், மடமடவென்று நடந்து சென்று, அந்நதியில் குதித்துத்

தன்னை நோக்கிப் பாய்ந்த அத்தீயோன் ஆற்றலைச் சிதைத்து, குழலிசை யெழுப்பி வனம் அனைத்தும் குளிரச் செய்த வரலாறு பாகவதத்தில் உளது. கண்ணன் அவன்மேல் ஏறியாடிய நடனம், காளிங்க நடனம் என்னும் பெயரை யெய்தியது.

நடனமாடிய காலத்தில், காளிங்கனது வளைந்த உடலிற்கு லகரத்தை உவமித்தது அற்புதமா யிருக்கிற தல்லவா! "யகரமே போல் சூலேந்தும்" என்றது போல, இதுவும் தமிழ் மரபில் புது நடை என்க.

காளிங்கம் - கருநிறம்; அதையுடையவன் காளிங்கன். நல் என்றது, அப் பாம்பின் மிகப் பெரிய தோற்றத்தை அறிவித்தற்கு வந்தது. காளிங்கனல்லுடல் என்பதை, காளிங்கன் அல் உடல் எனப் பிரித்துப் பொருள் கொண்டாருமுளர்; அல் என்பதற்கு, இருள் என்பது பொருள். தகர மர்த்தனம் - உள்ளமும் உடலும் தகர்ந்து போம்படிச் செய்த தாண்டவம். சங்கு + அரி - சங்கரி; சங்கு ஏந்திய திருமால் எனும் பொருட்டு.

குற்றங்களைக் குறைத்தளக்கவும், பெருக்கி விளக்கவும், தென்திசைத் தருமன் நீதிச் சபையில் பெறும் ஆன்ம தண்டனையை அளவுள் படுத்தவும், அதிகமாக்கவும் செயலாற்றுபவர் நிருதி; அவர் திசை தென் மேற்கு. அத்திசையில் அவர் மூலம் எனக்குப் பிழுது எய்தாதபடி, தவம் நிலைத்து அடியேன் தழைக்கும் வண்ணம், "சங்கரி மருகன் நிலைபெற என்னைக் காக்க" என்றார்.

வருணனுக்கு உரிய மேற்குத் திசையில் மிகு மழை, குறை மழை முதலியவைகளால் இடையூறு இடை விளையாதபடி, பகை அழிக்கும் பரமன் கைவேல் பாதுகாப்பதாக.

வடமேற்குத் திசையில், வாயு தேவனுடைய நல்ல ஆட்சி நடைபெறுகின்றது விராண் ஓட்டம் கிரமத்தில் நடைபெற, தூய வாயுவின் துணை வேண்டப் பெறும். இதய குகன் திருக்கை வேல், அத்திசையில் காப்பளித்ததாயின், கவலை யொன்றும் விளையாது என்பது இறுதியடியின் கருத்து. (25)

**வடதிசை தன்னில் ஈசன் மக(ன்) அருள் திருவேல் காக்க**
**விடையுடை யீசன் திக்கில் வேத போதகன் வேல் காக்க**
**நடக்கையில் இருக்கும் ஞான்றும் நவில்கையில் நிமிர்கையில் கீழ்க்**
**கிடக்கையில் தூங்கும் ஞான்றும் கிரிதுளைத்துள வேல்காக்க.**

(ப - ரை.) வடதிசை தன்னில் - வடக்குத் திசையில்; ஈசன் மகன் - சிவகுமாரனுடைய; அருள் திருவேல் காக்க - கருணை உருவான செல்வ வேல் காப்பதாக; விடையுடை ஈசன் திக்கில் - இடபம் ஏறும் ஈசான்யருடைய வடகிழக்குத் திசையில்; வேத போதகன் வேல் காக்க - வேத நுட்பத்தை உபதேசித்த சுவாமிநாதன் வேல் காப்பதாக; நடக்கையில் - நடக்கும் பொழுதும்; இருக்கும் ஞான்றும் - அமர்ந்து இருக்கும் பொழுதும்; நவில்கையில் - பேசும் பொழுதும்; நிமிர்கையில் - நிமிர்ந்து எழும்போதும்; கீழ் கிடக்கையில் - தரையில் படுத்திருக்கும் பொழுதும்; தூங்கும் ஞான்றும் - நித்திரை செய்யும் பொழுதும்; கிரி துளைத்துள வேல் காக்க - கிரவுஞ்சத்தை ஊடுருவிச் சென்ற வேல் காப்பதாக, (எ-று.)

வடதிசை - குபேர திசை; ஐம்முகச் சிவத்தின் கயிலையும் அத்திசையிற்றான் உளது. குபேரன் பொருட்கு அதிபன்; அவன் அருளால் செல்வம் பெரிது சித்திக்கலாம். அதனால் அறிவு மருளெய்தி அவலம் அடையாதபடி, அத் திசையிலிருக்கும் சர்வைஸ்வர்ய சம்பன்னரான சிவ குமாரனுடைய

அருளும் பொருளும் தரும் ஞான வேல், முன் வந்து காப்பதாக என்பது முதலடியின் செய்தி.

ஈசான்யர் - சிவசாம்ராஜ்யக் காப்புப் படைத் தலைவர். கல்லாப்பிழை, கற்றபடி நில்லாத கனத்த பிழை முதலிய குற்றம் பல செய்தவர்க்குக் கடுந் தண்டம் விளைவிக்கும் கர்த்தர் அவர். சிவத்திற்கு மறையருளிய குருநாதன் வேல், ஈசான்யர் தண்டம் நிகழாதபடி, இடைவந்து உதவுமேல், உண்மை உணர்ந்து தெளிவு பெறுவேன் என்பது இரண்டாம் அடியின் உட்கிடை.

நடக்கும்போது தவறி விழாதபடி, கல்லும் முள்ளும் காலில் உறுத்தாதபடி, அமர்ந்து இருக்கும் போது ஆசனத்தில் கொதிப்பு ஏருதபடி, பேசும் பொழுது குழறலும், நச்சு மொழியும் பிறவாதபடி, படுத்த காலத்தில் நில ஆவியால் பாதிப்பு அடையாதபடி, உறங்கும்போது மூச்சு அடைப்பு, தீய கனவு முதலியன உருதபடி, கபடு உருவான மலையைத் துளைத்த வேல் வந்து காப்பதாயின், கலக்கம் அகன்று, அமைதி யின்பத்தை அடைவேன் என்பது பின்னிரண்டடிகளின் கருத்து. (26)

**இழந்து போகாத வாழ்வை யீயும் முத்தையனுர் கைவேல்**
**வழங்கும் நல்லூண் உண்போதும் மால்விளையாட்டின் போதும்**
**பழம்சுரர் போற்றும் பாதம்பணிந்து நெஞ்(சு) அடக்கும்போதும்**
**செழும்குணத் தோடே காக்க திடமுடன் மயிலும் காக்க. 27**

(ப - ரை.) இழந்து போகாத வாழ்வை ஈயும் - கைவிட்டுப் போகாத பேரின்பப் பெருவாழ்வை அருளும்; முத்தையனுர் கைவேல் - முத்தையனுருடைய திருக்கை வேலானது; வழங்கும் நல் ஊண் உண்போதும் - உதவும் சிறந்த உணவை உண்ணும்

பொழுதும்; மால் விளையாட்டின் போதும் - மயங்க வைக்கும் விளையாட்டுப் போது போக்கிலும்; பழம் சுரர் போற்றும் பாதம் பணிந்து - பழைய தேவர்கள் துதிக்கும் திருவடிகளை வணங்கி; நெஞ்சு அடக்கும் போதும் - மனத்தை ஒருமைக்குக் கொணரும் சமயத்திலும்; செழுங் குணத்தோடே காக்க - திருவருட் குணத்துடன் இருந்து காப்பாற்றுவதாக; திடமுடன் மயிலும் காக்க - (பின் வாங்காத) உறுதியுடன் இருந்து (முத்தையனார் ஊர்தியான) மயிலும் உதவுவதாக, (எ - று.)

மின்னல் போல் தோன்றி மறைவது உலகியல் வாழ்வு. மாய வாழ்வு, கர்ம வாழ்வு என மதிப்பிடும் இதனில், இடையிடை விளையும் இடர்ப்பாடுகள் பல. அமலன் அருளும் வாழ்வு, என்றும் உள்ளதாய் இன்பம் தருவதாகலின், அதனை 'இழந்து போகாத வாழ்வு' என்றார். 'மாளா இன்ப மாகடலே' என்னும் திருவாசகம், இங்கு நினைவிற்கு வருகிறது அல்லவா!

அருள் வாழ்வின் வியாபகத்தில், ஆன்மா வியாப்பியமாய் அடங்கி ஆநந்தம் கொள்ளும். முதிர்ந்த இவ்வாழ்வை யளிப்பவர் 'முத்தையனார்'. விடுதலை யின்பம் விளைவிப்பவர் என்பது, இப் பெயரின் பொருள். உகந்த வாழ்வை யளிப்பவர் உயர்வை, அருமைபட உரைக்கின்றது, 'முத்து ஐயனார்' எனும் பெயர். வாழ்வை யளிக்கும் பெருமை, வேலின் மேலும் ஏறியுளது.

ஊழ்க்குத் தக்கபடி உணவு கிடைத்தலின், 'வழங்கும் ஊண்' என்றார். அதுவும், தூய ஊண் எனும் பொருளைத் தந்தது, 'நல்' எனும் அடை.

உவந்து கொண்ட உணவை உண்ணும் பொழுது விக்காமல், தொண்டையில் மார்பில்

அடைத்துக் கொள்ளாமல், ஜீரணமாகி, உண்டபின் விளையும் உலகியல் ஆட்டங்களில் ஈடுபட்டு விபரீத விளைவுகள் நிகழாதபடி, தூய பயன் நேர வேலும் மயிலும் துணைபுரிவதாக என்றார்.

வாழ்விக்கும் முருகனை வழிபட, ஒருமை உணர்வு உதிக்கும். அவ்வமயம் குறுக்கிடும் தேவ சோதனைகள் பல. அந் நிலையில், திகழ்ந்தெழுந் திருவருட் குணம் மேலிடுவதாக; உறுதியுடன் வந்து மயிலும் உதவுவதாக.

விடுதலை யின்பத்தை விரைந்தளிக்கும் முத் தையனாரும், அவருடைய வேலும் மயிலும், யான் கலங்கா வண்ணம் உறுதி கொண்டு முன்வந்து உதவவேணும் என்று பிரார்த்தித்தபடி.

முத்தையனையும் வேலையும் முதலடியில் எண்ணி, திருவருட் குணத்தையும் மயிலையும் இறுதி யடியில் வைத்து, [illegible] காக்க என்று போற்றும் அருமையை, உலகம் என்றும் உவந்து எண்ணும்.

"வேலும் மயிலும் நினைந்தவர் தம்துயர்
தீர அருள்தரு கந்த'

என்ற திருப்புகழ் அடி, இங்கு நம் நினைவில் நிழலிடு கின்ற தல்லவா!

பழம் சுரர் என்பது, வாய்த்த பதவியில் பல காலம் வாழ்ந்து கொண்டிருக்கும் தேவர்களைக் குறித்தது. (27)

**இளமையில் வாலிபத்தில் ஏறிடு வயோதிகத்தில்**
**வளர் அறுமுகச் சிவன்தான் வந்தெனைக் காக்க காக்க**
**ஒளியெழு காலை முன்எல் ஓம்சிவ சாமி காக்க**
**தெளிநடு பிற்பகல்கால் சிவகுரு நாதன் காக்க. 28**

(ப - ரை.) இளமையில்-, வாலிபத்தில்-, ஏறிடு வயோதிகத்தில் - (நரை, திரை, நோய், பல்வீனம், வயது) முதிர்ந்து வரும் முதுமைப் பருவத்தில்; வளர் அறுமுகச் சிவன் தான்-வளரும் அறுமுகச் சிவனர் ; வந்து எனைக் காக்க காக்க - (எளியேன் முன்) எழுந்தருளி என்னை (என்றும்) காப்பாற்றுவதாக ; ஒளி எழு காலை - பரிதி உதய காலத்தும் ; முன் எல்-முற்பகலிலும்; ஓம் சிவ சாமி காக்க—ஓம் பொருளான சிவசுவாமி காப்பதாக ; தெளிநடு - தெளிந்த நடுப் பகல் ; பிற்பகல்கால் - பிற்பகல் (முதலிய) காலங் களிலும் ; சிவகுருநாதன் காக்க-, (எ - று).

ஒன்றை எண்ணி ஒன்றைச் செய்து, ஒன்றின் இடத்தில் மனம் செல்லும் ; இது இளம் பருவச் செய்தி; காமன் அம்பு தைக்கவரும் காளைச்சேட்டை, வாலிபத்தின் தாழ்வு. வயிறு சரிய, பல்லாட, முதுகு வளைய, இருமல் உருமி வர, கண்கெட்டு, செவிடாகி, வருத்தம் மிகுவிக்கும் பருவம் வயோதிகம்.

ஆகாமியம் பெருகுதற்கு இடமான இப் பருவ காலங்களில், அருள் பெருக்கும் ஆறுமுகம் ஆ ஆ என்று வந்து அருளாதேல், என்கதி அதோகதிதான். ஆதலின், அவ்வப்போது என்முன் அறுமுகச் சிவம் எழுந்தருளி, வினை கெடுத்து, இனிய தவ நெறியில் எளியேனை யீடுபடுத்துவதாக என்பது, முதலிரண் டடிகளின் உட்கிடை.

பரிதி யுதயத்திலும், முன் பகலிலும் ஓம் சிவ சுவாமி காக்க என்பதும், பரிதி தெளிவான பட்டப் பகலிலும், பிற்பகலிலும் சிவகுரு நாதன் காக்க என்பதும், அவ்வக் கால நாம மந்திர வழிபாட்டு நலம் உணர்த்திய நடை. மேலும், அவ்வக் கால தேவதைகளால் அபாயம் விளையாதபடி உய்தி பெறும் உபாயம் நேர உதவுவதாக எனலும் ஒருவகை.

(28)

**இறகுடைக்கோழித்தோகைக்(கு) இறைமுன் இராவில் காக்க**
**திறலுடைச் சூர்ப்பகைத்தே திகழ்பின் இராவில் காக்க**
**நறவுசேர் தாள்சிலம்பன் நடுநிசி தன்னில் காக்க**
**மறைதொழு குழகன் எம்கோன் மாறுது காக்க காக்.** 29

(ப : ரை.) இறகுடைக் கோழித் தோகைக்கு இறை - இறகுடைய சேவலுக்கும் மயிலுக்கும் இறைவன் ; முன் இராவில் காக்க – (அடியேனை) இரவின் முற்பாகத்தில் காப்பதாக ; திறல் உடை சூர்ப்பகைத்தே – ஆற்றல் உடைய (ஆணவச்) சூரனின் பகைவனை தெய்வப்பிரான் ; திகழ்பின் இராவில் காக்க - விளங்குகின்ற இரவின் பிற்பாகத்தில் காப்பதாக; நறவு சேர் தாள் சிலம்பன் - தேன் பொருந்திய (கமலத்) திருவடிகளில் சிலம்பணிந்த நம்பன் ; நடுநிசி தன்னில் காக்க - பாதியிரவில், (என்னைப்) பாது காப்பதாக ; மறை தொழு குழகன் எம்கோன் - வேதங்கள் வழிபடும் இளம்பிரானை எம்பிரான் ; மாருது காக்க காக்க - மாறுதல் நேராதபடி என்றும் தொடர்ந்து காப்பளிப்பதாக. (எ - று.)

உலக ஓசை ஒலிகள் அனைத்தும், சிறிது சிறிதாக ஒடுங்கும் முன் இரவின் அதிதேவதைகள் பலர் உள்ளர். நல்லாரும் பொல்லாரும் என அவர்களில் இருதிறத்தர் இருக்கின்றனர். ஆன்மாக்களின் ஆகூழ் போகூழ்க்குத் தக்கபடி. அவர்கள் பார்வையில் மக்கள் அகப்படுவர். அதனால் விளையும் அல்லல்களும் பல. தியானகால நாத ஆரம்பம் செய்து வைக்கும் சேவலாலும், மறைப்பின் ஆரம்பம் செய்து வைக்கும் மயிலாலும், அந்த முன்னிரவில் நலமே விளைய, இறையருள் வந்து உதவுவதாக் என்பது. முதலடியின் உட்கிடை.

கோழியைக் கொடியாகவும், மயிலை ஊர்தியாகவும் உடையவன் இறைவன். அப்ராக்ருத மயிலும்

சேவலும் இறைவனுக்கு அநாதியே உளது.* அவை, விந்து, நாதம் எனப் பெறும். அஃதன்றி அக்கினி சேவலாக, இந்திரன் மயிலாக இடையில் வந்த துண்டு. இறுதியில், சூரபதுமன் மயிலும் சேவலு மாக வந்த இனிய வரலாறு ஒன்றும் இருக்கின்றது. இவைகளை யெல்லாம் எண்ணி, 'இறகுடைக் கோழித் தோகைக்கு இறை' என்றார்.

* 'கோழி படைப்பு குளிமஞ்ஞை காப்பு கரம்
தாழும் அயில்வேல் சங்காரம்'

என்பார் குரலும் இங்கு எண்ணத் தகும்.

ஆற்றல் மிக்க அஞ்ஞான இருளை, ஆன்மாவில் வளர்க்கின்றது ஆணவம். அதுவே அண்டத்தில் சூரபதுமனாகி, உடலொடு கூடிய சிறந்த உயிர்களைச் சிறையிலிட்டுச் சித்திரவதை செய்யும். இந்நிலையில், சொரூப தடத்த சுயஞ்சோதியின் அருட் பேற்றால், அறியாமை இருள் அகல, அண்டத்தும் பிண்டத்தும், உயர்ந்த மெய்ஞ்ஞான பரிதி உதயமாகும். அந்த அநுபவம் விளைவிக்கும் "சூர்ப்பகைத் தேதிகழ்வன் இராவில் காக்க" என்றார். ஊன்றி இவைகளை உணர்வது நலம்.

நம்பன் திருவடிச் சிலம்பின் நாதம், உலக ஓசை ஒலிகளெல்லாம் அடங்கும் நள்ளிரவில் கேட்கும். தழைக்கும் அந்நாதம் மிகுமேல், எவராலும் தாங்க லொண்ணா. நயமாயின், ஆன்மா அதனில் லயமடையும். அதனாற்றான், 'நறவு சேர் தாள் சிலம்பன்' என்று, அதனை இனிது அறிவித்தார்.

நறவு - பேரின்பத்தேன்; அருள்மணமுமாம்.

'அல்லில் கதிதான் அருள்சிறந்த வேல்இறை
புல்லி நம் உள்ளம் புகுமேல் அவன் தாளில்
கல் என்னும் நன்னாதம் கேளாமோ கேளாய்'

எனவும்,

"நாத ஒண்சி லம்பலம்ப நாடகம் புரிந்திடும்
பாத பங்க யங்களைப் பணிந்தும் இந்த நாள் ஐயோ
ஏதும் இன்றி மாய்வனோ ஏரகச் சுரேசனே
தாதை யென்(று)அடுத்த என் றனைப்பு ணர்ந்து
[கொள்வையே"

எனவும் வரும் திருவலங்கல் திரட்டு இங்கு எண்ணத்தகும். (29)

இனமெனத் தொண்டரோடும் இணக்கிடும் செட்டி காக்க
தனிமையில் கூட்டந் தன்னில் சரவண பவனார் காக்க
நனியனு பூதி சொன்ன நாதர்கோன் காக்க இத்தைக்
கனிவொடு சொன்ன தாசன் கடவுள்தான் காக்க வந்தே. 30

(ப - ரை.) இனம் என - (நீ சேர்ந்து வாழத் தக்க) உறவினர் என்று சொல்லி; தொண்டரோடும் இணக்கிடும் செட்டி காக்க - அடியவருடன் கூட்டி வைக்கும் செட்டிக் குமரன் (என்னைக்) காப்பானாக; தனிமையில் - (நான்) தனித்திருக்கும் போதும்; கூட்டம் தன்னில் - பெரிய கூட்டத்தில் இருக்கும் பொழுதும்; சரவணபவனார் காக்க-; நனி அநுபூதி சொன்ன - சிறந்த (கந்தர்) அநுபூதி திருவாய் மலர்ந்தருளிய; நாதர்கோன் காக்க - (அருணகிரி) நாதரை ஆண்டுகொண்ட கடவுட் பெருமாள் காப்பானாக; இத்தை - இந்த (சண்முக கவச பாராயண) நூலை; கனிவொடு சொன்ன - உள்ளங் கனிந்த உவகையுடன் பாடியருளிய; தாசன் கடவுள் தான் காக்க வந்தே - குமரகுரு தாசன் (என்னும் என்) தெய்வமான கடவுள் வந்து காத்தருள்வதாக, (எ - று.)

அமல குமரன் அடியவரே சத்திய நித்திய உறவினர். அவர்கள் சார்பே மெய்ச்சார்பு. அறுமுகன் அருள் கூட்டிவைத்தா லன்றி, அடியர் சார்பு

அமையாது. திருந்தாத உயிர்களை, இதோ உன் உறவினர் என லௌகிகத்திலும், திருந்தினரை, இதோ உன் இனத்தவர் என்று அடியவர் கூட்டத்திலும் தொடர்பு படுத்துபவன் ஆதலின், இணக்கிடும் 'செட்டி' என்றார்; செட்டுத்தனமானவன் செட்டி என்க; மருளை வாங்கி அருளை அளிக்கும் வணிகன் எனலும் ஒருவகை.

தன்னந்தனி நிற்பவன் தற்பரன்; அடியவர் உறவால் தனிமை பெறும் ஆன்மா, இனிய அப்பரனை நினைந்து இன்புறும். தனிமையாவது - கருவி கரணங்களுடன் ஒன்றாமல், பரத்தில் ஒன்றுபடும் தியான அநுபவம்.

"தன்னந் தனி நின்றது தான்அறிய
இன்னம் ஒருவர்க்(கு) இசைவிப்பதுவோ"

என்பது கந்தர் அநுபூதி.

கூட்டமாவது – பஜனை, திருவருள் பிரபாவ சொற்பொழிவு முதலியன நிகழ்த்தும் இடங்களில் கூடும் அன்பர்களின் கூட்டம்.

இந்த இரண்டு இடங்களிலும் வித்தக அமைதி வேண்டும்; இறைவன் அருள் தொடர்பு இலதேல், உரிய அந்த ஒருமை பிறவா. அந்நிலையில் தவறித் தவறித் தடுமாறி, குழறிக் குழறிக் குப்புற விழுந்து விடும் ஆன்ம உணர்வு; இது என்றும் நிகழ் செய்தி. அவ்வநுபவம் ஆகாதபடி, ஆறெழுத்துப் பயில்வினர்க்கு அந் நிமித்தான் அருள் பாலிப்பானாக என்பார், 'சரவணபவனார் காக்க', என்றார்.

அநு - உடன்; பூதி - ஆதல்; இந்த அநுபவ ஞானத்தைப் பாட்டாகப் பாடியவர் அருணகிரிநாதர். அவர்க்கு அருளிய அமல அத்தன், எளிய எனக்கும் அருள் பாலிப்பானாக என்பது, மூன்றாவது அடியில் உள்ள முறையீடு.

இந்தச் சண்முக கவசத்தை, உருகிய உள்ளத் தொடு ஓதிய குமரகுருதாசன் எனும் பெயரை யுடைய அடியேன் வழிபடும் ஆநந்தத் தெய்வம், அருள் வாழ்வை வந்து அளிப்பதாக என்பது. நான்காவது அடியில் உள்ள நலம்.

''தொண்டர்கள் குருவுமாகித் துகளறு தெய்வமாகி
எண்திசை போற்ற நின்ற என்னருள் ஈசனை'

'திண்திறல் சரவணத்தான்' என்ற முதல் பாசுரக் கருத்து, இந்த இறுதிப் பாசுரத்திலும் இணங்கியுளது. இதை உணர்வார் உள்ளம் உருகி நிற்கும்.

''ஒருநிமிட மேனும்உள் உருகிநின் பால்நிற்க
உரமிலார் அமர ரெனினும்
உன் அடிமை நாஞெரு விதத்திலும் மதிக்கிலேன்;
உனைநினைவர் சிறிய ரெனினும்
இருடிகள் எனக் கருதி அவரடி வணங்குவேன்
எனையடிமை கொண்ட பரமே!
இஞ்சிவின் மந்த்ரமலி செந்திலி லமர்ந்த எழில்
எந்தையே கந்த சிவமே!''

எனவரும் குமரகுருதாசர் பாடலில், அடியாரிடத்தில் அடிகள் கொண்டிருக்கும் ஆர்வம் வெளியாதலறிக.

காக்க வந்தே என்பதில், வரவேண்டு முருகன் வந்து அருள வேண்டும் என்னும் வேட்கை யின் மிகுதி வெளிப்படுகின்றது.

சண்முக கவச உரை நிறைவு பெற்றது.

குமரகுருபரன் திருவடி வாழ்க.

ஓம் சாந்தி! சாந்தி!! சாந்தி!!!

---

உ

# பிழைத் திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 2 | 21 | காண்டறகும் | காண்டற்கும் |
| 7 | 17 | சுப்பிரமதர்ப்பவி | சுப்பிரமதர்ப்பவிர் |
| 10 | 27 | மாயேனெ | மாயோனென |
| 12 | 22 | குமாரய | குமாராய |
| 14 | 8 | என்ர்ரு | என்ருர் |
| ,, | 22 | மலர்களின் | மலர்மகளின் |
| 19 | 10 | வழிடுவார் | வழிபடுவார் |
| 24 | 16 | அகைத்த | துகைத்த |
| 27 | 10 | தாச்சூழ் | தரச்சூழ் |
| [illegible] | 23 | பாமார்த்த | பரமார்த்த |
| 28 | 12 | சொலே | சோலே |
| 29 | 26 | வருந்திடாது | வருத்திடாது |
| [illegible] | 24 | ஓச்சின் | ஓச்சின் |
| 4 | [illegible] | எலலாம் | எல்லாம் |

அன்பளிப்பு :

திரு. பலராம முதலியார்

திரிபுரசுந்தரி சில்க் ஹவு

14-A, அய்யா முதலி தெரு, சிந்தாதிரிப்பே

சென்னை-2, தமிழ்நாடு.

தொலைபேசி 83321

திரிபுரசுந்தரி சி

7, செல்லப்ப கிராமணி லேன்

சென்னை-7, தமிழ்